# معنى لا إله إلا اللّه

# லாஇலாஹா இல்லல்லாஹ்
# கலிமாவின் பொருள் விளக்கம்

تأليف :حسن علي بن حميد العمري النذيري

ஆசிரியர்: அபு உமர் ஹசன் அலி உமரி

அஸ்ஸலஃபிய்யா பதிப்பகம்

About this book

| | |
|---|---|
| Book Name | : Laailaha Illallaah vin Porul Vilakkam |
| Author | : Abu Umar Hasan Ali Umari, Nazeeri |
| Language | : Tamil |
| Copy Right | : @ Author |
| Pages | : 80 |
| Edition | : First |
| Price | : **Rs. 50/-** |
| Published by | : |

**AS-SALAFIYAH PUBLICATION**
71, Middle Street, Adirampattinam - 614 701
Thanjavur Dist, Tamilnadu.



## இந்நூலின் உள்ளே...







# முன்னுரை

இஸ்லாமிய மார்க்கத்தின் அடிப்படை கொள்கையான லாஇலாஹா இல்லல்லாஹ் என்னும் கலிமாவை பற்றி அறிந்திருப்பது ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் கட்டாய கடமையாகும். ஆகவேதான் அல்லாஹ் கூறுகிறான்,

فَاعْلَمْ أَنَّهُ لَا إِلَهَ إِلَّا اللهُ

உண்மையான வணக்கத்திற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை என்பதை நன்றாக அறிந்துக் கொள்ளுங்கள். (அல்குர்ஆன் 47:19)

லாஇலாஹா இல்லல்லாஹ் என்னும் கலிமாவைப் பற்றிய கல்வியறிவு இல்லாத காரணத்தினால் தான் மக்கள் அல்லாஹ்விற்கு இணை கற்பிக்கின்றனர். எனவே கலிமாவைப் பற்றிய கல்வியை அறிவது மிகவும் அவசியமாக இருக்கிறது. அத்தகைய கல்வியை மக்களுக்கு தெரியப்படுத்துவதற்கே இந்நூலை எழுதியிருக்கிறேன்.

இந்நூலை, ஷெய்க் ஸாலிஹ் பின் ஃபவ்ஜான் அல்ஃபவ்ஜான் அவர்களின் **معنى لا إله إلا الله** - லாஇலாஹா இல்லல்லாஹ்வின் பொருள் எனும் நூலை அடிப்படையாக கொண்டும், வேறு சில அறிஞர்கள் இத்தலைப்பில் எழுதியுள்ள தகவல்களை கொண்டும் உருவாக்கி இருக்கிறேன்.

இந்நூலில் லாஇலாஹா இல்லல்லாஹ்வின் அந்தஸ்து, சிறப்புகள், பொருள் விளக்கம், அடிப்படைகள், நிபந்தனைகள், அதன்மீது எவ்வாறு ஈமான் கொள்ள வேண்டும் மற்றும் அதனால் ஏற்படும் நன்மைகள் யாவை என்பன போன்ற தலைப்புகளின் கீழ் தகவல்களை இடம் பெற செய்திருக்கிறேன்.

இந்நூலில் தமிழ் திருத்தங்களை சரிபார்த்து தந்த எனது நண்பர் அஸ்கர் அவர்களுக்கும் அல்லாஹ் நற்கூலி வழங்குவானாக! மேலும் இந்நூல் வெளிவருவதற்கு எனக்கு எல்லா விதத்திலும் உறுதுணையாக இருந்த எனது நண்பர்களுக்கும் அல்லாஹ் நன்மையை அளிப்பானாக! இறுதியாக இந்நூலை நல்லெண்ணத்துடன் படிக்கும் அனைவருக்கும் லாஇலாஹா இல்லல்லாஹ் என்னும் கலிமாவில் அறியவேண்டிய கல்வியை வழங்கிட வேண்டி அல்லாஹ்விடமே பிரார்த்திக்கின்றேன்! ஆமீன்.

அன்புடன்

**அபு உமர் ஹசன் அலி உமரி**
hasanumari@gmail.com

# مكانة لا إله إلا الله

# லாஇலாஹா இல்லல்லாஹ்வின் அந்தஸ்து

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவிற்கு மகத்தான அந்தஸ்து இருக்கின்றது. ஆகவே தான் நாம் நமது அழைப்பிலும், தொழுகையிலும், மார்க்க பிரச்சாரங்களிலும் இதனை திரும்பத் திரும்ப கூறிக் கொண்டிருக்கிறோம். இந்த கலிமாவை அடிப்படையாக கொண்டு தான் ஒருவரின் இறைநம்பிக்கை தீர்மானிக்கப்படுகிறது. இந்த கலிமாவை அடிப்படையாக கொண்டுதான் ஒருவரின் செயல்கள் அங்கீகரிக்கப் படுகிறது. ஆக இத்தகைய அந்தஸ்தை பெற்ற கலிமாவைப் பற்றி விரிவாக பார்ப்போம்!

1 - லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கையை நிலைநாட்டுவதற் காகவே மனிதர்கள் படைக்கப்பட்டார்கள்.

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கையை ஏற்று அதனடிப்படையில் வாழவேண்டும் என்பதற்காகத்தான் அல்லாஹ் மனிதர்களை படைத்திருக்கிறான்.

அல்லாஹ் கூறுகிறான்,

﴿وَمَا خَلَقْتُ الْجِنَّ وَالْإِنْسَ إِلَّا لِيَعْبُدُونِ﴾

மேலும் ஜின்களையும், மனிதர்களையும் என்னை அவர்கள் வணங்கு வதற்காகவே தவிர நான் படைக்கவில்லை. (அல்குர்ஆன் 51 : 56)

இந்த வசனத்தில் கூறப்பட்டுள்ள பொருளைதான் லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவும் கூறுகிறது.

அல்லாஹ் ஒருவனை மட்டுமே வணங்கவேண்டும், அவனைத்தவிர வேறு யாரையும் வணங்கக் கூடாது என்ற நோக்கத்தை நிறைவேற்றுபவர்கள்

இப்பூமியில் இருக்கும் வரை இப்பூமியானது நிலைத்திருக்கும். இந்நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு ஒருவரும் இல்லாத நிலையில் இவ்வுலகம் அழிக்கப்பட்டு விடும்

عَنْ أَنَسٍ قَالَ قَالَ رَسُولُ اللهِ صلى الله عليه وسلم لاَ تَقُومُ السَّاعَةُ عَلَى أَحَدٍ يَقُولُ اللهُ اللهُ

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள், அல்லாஹ் அல்லாஹ் என்று சொல்லிக்கொண்டிருக்கும் (இறைநம்பிக்கையாளர்களில்) எந்த ஒருவர் மீதும் கியாமத் நாள் நிகழாது. (அறிவிப்பாளர்: அனஸ் பின் மாலிக் ؓ, நூல்: முஸ்லிம்)

عَنْ أَبِى هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللهِ صلى الله عليه وسلم إِنَّ اللهَ يَبْعَثُ رِيحًا مِنَ الْيَمَنِ أَلْيَنَ مِنَ الْحَرِيرِ فَلاَ تَدَعُ أَحَدًا فِى قَلْبِهِ قَالَ أَبُو عَلْقَمَةَ مِثْقَالُ حَبَّةٍ وَقَالَ عَبْدُ الْعَزِيزِ مِثْقَالُ ذَرَّةٍ مِنْ إِيمَانٍ إِلاَّ قَبَضَتْهُ ».

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள், (மறுமைநாள் நெருங்கும்போது) யமன் நாட்டிலிருந்து பட்டைவிட மென்மையான ஒரு காற்றை அல்லாஹ் அனுப்புவான் எவரது உள்ளத்தில் கடுகளவு அல்லது அணுவளவு ஈமான் உள்ளதோ அவ(ரது உயி)ரை அது கைப்பற்றிக் கொள்ளும். (அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: முஸ்லிம்)

உலகம் அழிக்கப்படுவதற்கு முன்பு எவரின் உள்ளத்தில் லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கையின் மீது நம்பிக்கை இருக்குமோ அத்தகையவர்கள் மீது அல்லாஹ் யமன் நாட்டிலிருந்து பட்டைவிட மென்மையான ஒரு காற்றை அனுப்புவான். அதனை அவர்கள் நுகர்ந்ததும் மரணித்துவிடுவார்கள். பிறகு உலகில் ஒரு இறைநம்பிக்கையாளன் கூட இருக்க மாட்டான், இறை நிராகரிப்பாளர்கள் மட்டுமே இருப்பார்கள் அந்நிலையில்தான் இவ்வுலகம் அழிக்கப்படும்.

ஆக லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கையை நிலைநாட்டுவதற்காகவே அல்லாஹ் இவ்வுலகத்தை படைத்திருக்கிறான் என்பதிலிருந்து கலிமாவின் அந்தஸ்தை அறியலாம்.

2 - லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கையின் பக்கம் மக்களை அழைப்பதற்காக தான் தூதர்களும், நபிமார்களும் இவ்வுலகிற்கு அனுப்பப்பட்டார்கள்.

﴿وَلَقَدْ بَعَثْنَا فِي كُلِّ أُمَّةٍ رَسُولًا أَنِ اعْبُدُوا اللهَ وَاجْتَنِبُوا الطَّاغُوتَ﴾

ஒவ்வொரு சமூகத்திலும் திட்டமாக நாம் ஒரு தூதரை அனுப்பியிருக்கிறோம். (அத்தூதர் அச்சமூகத்தவர்களிடம்) அல்லாஹ்வையே வணங்குங்கள். (அல்லாஹ் அல்லாத வணங்கப்படும் ஷைத்தான்களாகிய அனைத்து) தாகூத்துகளிலிருந்தும் நீங்கள் விலகிக் கொள்ளுங்கள் (என்று கூறினார்கள்) (அல்குர்ஆன் 16 : 36)

ஆக நபிமார்களும், தூதர்களும் மக்களை லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கையின் பக்கம் அழைக்கும் நோக்கத்திற்காகவே தான் அனுப்பப்பட்டார்கள்.

நபி ﷺ அவர்கள், மக்காவில் நபியாக வாழ்ந்த பதிமூன்று ஆண்டுகள் லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கையின் பக்கம் தான் மக்களை அழைத்தார்கள். இக்கொள்கையின் மீது அம்மக்களை உறுதியாக்கிய பிறகுதான் மார்க்கத்தின் மற்ற சட்டத்திட்டங்களை அம்மக்கள் மத்தியில் போதித்தார்கள்.

இஸ்லாமிய மார்க்கத்தினை மக்கள் மத்தியில் கொண்டு செல்வதற்காக நபி ﷺ அவர்கள் ஸஹாபா பெருமக்களை பல பகுதிகளுக்கு அழைப்புபணி செய்ய அனுப்பி வைத்தார்கள். அவ்வாறு அனுப்பப்பட்ட ஸஹாபாக்களிடம் இக்கொள்கையைப் பற்றித்தான் முதலில் சொல்ல வேண்டும் என கட்டளையிட்டார்கள்.

عَنِ ابْنِ عَبَّاسٍ رضى الله عنهما أَنَّ رَسُولَ اللهِ صلى الله عليه وسلم لَـمَّا بَعَثَ مُعَاذًا رضى الله عنه عَلَى الْيَمَنِ قَالَ «إِنَّكَ تَقْدَمُ عَلَى قَوْمٍ مِنْ أَهْلِ الْكِتَابِ

فَلْيَكُنْ أَوَّلَ مَا تَدْعُوهُمْ إِلَى أَنْ يُوَحِّدُوا اللهَ تَعَالَى فَإِذَا عَرَفُوا ذَلِكَ فَأَخْبِرْهُمْ أَنَّ اللهَ فَرَضَ عَلَيْهِمْ خَمْسَ صَلَوَاتٍ فِى يَوْمِهِمْ وَلَيْلَتِهِمْ ، فَإِذَا صَلُّوا فَأَخْبِرْهُمْ أَنَّ اللهَ افْتَرَضَ عَلَيْهِمْ زَكَاةً فِى أَمْوَالِهِمْ تُؤْخَذُ مِنْ غَنِيِّهِمْ فَتُرَدُّ عَلَى فَقِيرِهِمْ ، فَإِذَا أَقَرُّوا بِذَلِكَ فَخُذْ مِنْهُمْ وَتَوَقَّ كَرَائِمَ أَمْوَالِ النَّاسِ» (بخاري – 5841)

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் முஆத் பின் ஜபல் رضي الله عنه அவர்களை யமன் நாட்டுக்கு அனுப்பியபோது அவரிடம், நீர் வேதம் கொடுக்கப்பட்ட மக்களிடம் செல்கிறீர். எனவே, அவர்களை முதலில் அல்லாஹ் ஒருவனை மட்டுமே வணங்குவதின் பக்கம் அழைப்பீராக! அவர்கள் அதனை அறிந்துக்கொண்டால் ஒவ்வொரு நாளின் பகலிலும், இரவிலும் ஐந்து வேளை தொழுகையை அவர்கள் மீது அல்லாஹ் கடமையாக்கி உள்ளான் என்பதை தெரிவிப்பீராக! தொழுகையை அவர்கள் நிறைவேற்றினால் அவர்களின் செல்வங்களின் மீது அல்லாஹ் ஜகாத்தை கடமையாக்கி உள்ளான் என்பதை தெரிவிப்பீராக! எனவே, அந்த ஜகாத்தை அவர்களின் செல்வந்தரிடத்தில் பெற்று ஏழைகளுக்கு கொடுப்பீராக! அவர்கள் இதனை ஏற்றுக்கொண்டால், அவர்களிடமிருந்து ஜகாத்தை பெறுங்கள். மனிதர்களின் செல்வத்திலிருந்து உயர்தரமானதை பெறுவதை தவிர்ப்பீராக என கூறி அனுப்பினார்கள். (அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் பின் அப்பாஸ் رضي الله عنه நூல்: புகாரி - 1458)

ஆக முதலில் லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கையின் பக்கம் அழைப்பதுதான் நபி ﷺ அவர்களின் அழைப்பு பணியாகவும் இருந்தது. அவர்களின் உத்தம ஸஹாபாக்களின் வழிமுறையாகவும் இருந்தது. எனவே, அழைப்புப் பணியில் ஈடுபடுபவர்கள் இதனை கவனத்தில் கொண்டு செயல்படுவது அவசியமாகும். ஏனெனில் நாம் வாழும் இக்காலத்திலே பலர் அழைப்புபணி செய்கிறோம் என்ற பெயரில் லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற அடிப்படை கொள்கையின் பக்கம் அழைப்பதை விட்டுவிட்டு மார்க்கத்தின் மற்ற காரியங்களை பிரதானமாக கருதி அவற்றின் பக்கம் அழைத்து கொண்டிருக்கிறார்கள். இவ்வாறான அழைப்புபணியில் ஈடுபடுவது நபி வழியாகாது என்பதை அறிவது அவசியமாகும்.

3 - இஸ்லாமிய மார்க்கத்தில் செயல்படுவதற்கு முன்பு அடிப்படையான கல்வியை பெறுவது அவசியமாகும்

﴿فَاعْلَمْ أَنَّهُ لَا إِلَهَ إِلَّا اللهُ وَاسْتَغْفِرْ لِذَنْبِكَ وَلِلْمُؤْمِنِينَ وَالْـمُؤْمِنَاتِ﴾

நிச்சயமாக அல்லாஹ்வைத் தவிர (உண்மையான) வணக்கத்திற்குரியவர் வேறு யாரும் இல்லை என்பதை நீர் அறிந்து கொள்வீராக! உம்முடைய பாவத்திற்காகவும், விசுவாசங்கொண்ட ஆண்களுக்காகவும், விசுவாசங் கொண்ட பெண்களுக்காகவும் பாவமன்னிப்பு கோருவீராக! (அல்குர்ஆன் 47 : 19)

இவ்வசனத்தில் அல்லாஹ் அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் இல்லை என்ற கல்வியை அறிந்திருப்பதை முதலாவதாகவும், பாவமன்னிப்பு கோருவீராக என்பதை இரண்டாவதாகவும் கூறுகிறான். பாவமன்னிப்பு என்பது தொழுகை நோன்பு போன்று ஒரு (அமலாகும்) செயலாகும். ஆக, அல்லாஹ் செயலைவிட லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கை பற்றிய கல்வியைத்தான் முதலில் அறிய வேண்டும் என்கிறான்.

இவ்வசனத்தை அடிப்படையாக கொண்டு இமாம் புகாரி (رحمه الله) அவர்கள் தனது ஸஹீஹுல் புகாரியில் சொல்வதற்கு, செயல்படுவதற்கு முன்பு (அகீதா என்ற) கல்வியை பயில்வது முதன்மையானது என தலைப்பிட்டு அத்தலைப்பின் கீழ் இவ்வசனத்தை பதிவு செய்துள்ளார்கள்.

இத்தகைய அந்தஸ்தைப் பெற்ற லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை பற்றிய கல்வியை அறிவதுதான் தொழுகை, ஜகாத், நோன்பு மற்றும் ஹஜ் போன்ற எல்லா நன்மையான செயல்களை செய்வதை விடவும் முதலாவது கடமையாக இருக்கிறது.

4 - இஸ்லாத்தின் முதலாவது அடிப்படையாக இருக்கிறது

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்,

عَنِ ابْنِ عُمَرَ رضى الله عنهما قَالَ قَالَ رَسُولُ الله صلى الله عليه وسلم بُنِىَ الإِسْلاَمُ عَلَى خَمْسٍ شَهَادَةِ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللهِ وَإِقَامِ الصَّلاَةِ وَإِيتَاءِ الزَّكَاةِ وَالْحَجِّ وَصَوْمِ رَمَضَانَ.

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள், இஸ்லாம் ஐந்து காரியங்களின் மீது நிறுவப்பட்டுள்ளது. அவை வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும், முஹம்மது ﷺ அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்றும் சாட்சி கூறுதல், தொழுகையை நிலைநாட்டுதல், ஜகாத் வழங்குதல், ஹஜ்ஜை நிறைவேற்றுதல், ரமளான் நோன்பை நிறைவேற்றுதல் ஆகிய ஐந்து காரியங்கள் ஆகும். (அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் பின் உமர் رضي الله عنه நூல்: புகாரி - 8)

இந்த ஹதீஸில் நபி ﷺ அவர்கள் இஸ்லாத்தின் ஐந்து முக்கியமான காரியங்களில் முதலாவதாக லாஇலாஹா இல்லல்லாஹ் முஹம்மது ரசூலுல்லாஹ் என்ற கலிமாவை பற்றித்தான் குறிப்பிடுகிறார்கள்.

**மார்க்க அறிஞர்களின் கருத்துகள்**

ஷெய்குல் இஸ்லாம் இப்னு தைமிய்யா **(رحمه الله)** அவர்கள் கூறுகிறார்கள், இஸ்லாத்தின் அடிப்படையாகவும், படைப்பினங்களுக்கு முதல் கட்டளை யாகவும் இடப்பட்டது ஷஹாதா கலிமாவான லாஇலாஹா இல்லல்லாஹ் முஹம்மது ரசூலுல்லாஹ் ஆகும். இதுவே அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கொண்டு வந்த மார்க்கத்தில் மிக முக்கியமானதாகும். எனவே, இஸ்லாமிய மார்க்கத்தில் முதல் நிலையில் இருக்கும் லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கையை அறிவதும், அதன் பக்கம் மக்களை அழைப்பதும்தான் நம்மீதுள்ள முதல் கடமையாகும்.

இமாம் இப்னுல் அபில் இஜ் **(رحمه الله)** அவர்கள் கூறுகிறார்கள், ஷஹாதா கலிமாவைப் பற்றிதான் மனிதர்களிடம் முதல் முதலில் கூறவேண்டும் என்பதில் ஸலஃப்புஸ்ஸாலிஹீன் (முன்சென்ற நல்லோர்கள்) அனைவரும் ஒருமித்த கருத்தில் உள்ளார்கள். (ஷர்யு தஹாவிய்யா 1/60)

இமாம் இப்னு உயைனா **(رحمه الله)** அவர்கள் கூறுகிறார்கள், லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை அறிவதே அல்லாஹ் அடியார்கள் மீது ஏற்படுத்திய அருட்கொடைகளில் மகத்தானதாகும்.

---------------

# فضل لا إله إلا الله

## லாஇலாஹா இல்லல்லாஹ்வின் சிறப்புகள்

﴿شَهِدَ اللهُ أَنَّهُ لَا إِلَهَ إِلَّا هُوَ وَالْمَلَائِكَةُ وَأُولُو الْعِلْمِ قَائِمًا بِالْقِسْطِ لَا إِلَهَ إِلَّا هُوَ الْعَزِيزُ الْحَكِيمُ﴾

அல்லாஹ் சாட்சி கூறுகிறான், நிச்சயமாக அவன் - அவனைத்தவிர (வேறு)வணக்கத்திற்குரியவன் இல்லை. (அவ்வாறே) மலக்குகளும் மற்றும் வேதஞானம் பெற்ற கல்விமான்களும் சாட்சி கூறுகின்றனர். நீதத்தை நிலை நிறுத்தியவனாக (அல்லாஹ் சாட்சி கூறுகிறான்) அவனைத் தவிர உண்மையான வணக்கத்திற்குரியவன் (வேறு) இல்லை. (அவனே யாவரையும்) மிகைத்தோன், தீர்க்கமான அறிவுடையோன்.

(அல்குர்ஆன் 3 : 18)

இவ்வசனத்தில் லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவிற்கு அல்லாஹ்வே சாட்சியளிப்பதாக இருமுறை கூறுவதிலிருந்து கலிமாவின் சிறப்பை அறியலாம். மேலும் மலக்குமார்களும் மார்க்க கல்விமான்களும் சாட்சியளிப்பதாக கூறுவதிலிருந்தும் கலிமாவின் சிறப்பை அறியலாம்!

عَنْ أَنَسٍ عَنِ النَّبِيِّ صلى الله عليه وسلم قَالَ «يَخْرُجُ مِنَ النَّارِ مَنْ قَالَ لاَ إِلَهَ إِلاَّ اللهُ ، وَفِى قَلْبِهِ وَزْنُ شَعِيرَةٍ مِنْ خَيْرٍ وَيَخْرُجُ مِنَ النَّارِ مَنْ قَالَ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَفِى قَلْبِهِ وَزْنُ بُرَّةٍ مِنْ خَيْرٍ، وَيَخْرُجُ مِنَ النَّارِ مَنْ قَالَ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَفِى قَلْبِهِ وَزْنُ ذَرَّةٍ مِنْ خَيْرٍ» (البخاري – 44)

நபி ﷺ அவர்கள் கூறினார்கள், தமது உள்ளத்தில் ஒரு வால் கோதுமையின் அளவு நன்மை இருக்கும் நிலையில் எவரொருவர் லாஇலாஹ இல்லல்லாஹ் என்று கூறினாரோ அவர் நரகிலிருந்து வெளியேறி விடுவார். மேலும் எவர் தமது இதயத்தில் ஒரு கோதுமையின் அளவு நன்மை இருக்கும் நிலையில் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறினாரோ அவரும் நரகிலிருந்து வெளியேறி விடுவார். மேலும் எவர் தமது உள்ளத்தில் ஒரு அணு அளவு நன்மை இருக்கும் நிலையில் லாஇலாஹ இல்லல்லாஹ் என்று கூறினாரோ அவரும் நரகிலிருந்து வெளியேறி விடுவார். (அறிவிப்பாளர்: அனஸ் பின் மாலிக் رضي الله عنه நூல்: புகாரி - 44)

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கையை சுமந்தவர்கள் வேறு சில பெரும் பாவங்களுக்காக நரகில் நுழைந்தாலும் அதில் அவர்கள் நிரந்தரமாக தங்க மாட்டார்கள். தங்களின் பாவத்திற்கான தண்டனையை அனுபவித்த பிறகு அவர்கள் நரகிலிருந்து வெளியேற்றப்பட்டு சொர்க்கத்தில் நுழைவிக்கப்படுவார்கள் என்பதிலிருந்து லாஇலாஹா இல்லல்லாஹ்வின் சிறப்பை அறியலாம். ஆக இக்கலிமாவை சுமந்தவர்களில் எவரும் நிரந்தர நரகத்தில் இருக்க மாட்டார்.[1]

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற நம்பிக்கையை சுமந்தவரிடம் செயல்களும் அவசியமாக இருக்க வேண்டும் என்பதை இந்த ஹதீஸிலிருந்து அறியலாம்.

---

1 - பெரும் பாவங்களான தற்கொலை, வட்டி மற்றும் பிற முஸ்லிமை கொல்வது போன்ற பாவங்களில் ஈடுபட்டு, தவ்பா செய்யாத நிலையில் ஒருவர் மரணித்து விட்டால் அவரின் காரியம் அல்லாஹ்வின் நாட்டத்தை பொருத்து அமையும். அல்லாஹ் நாடினால் அவரை மன்னிக்கலாம். அல்லது அவரை குறிப்பிட்ட காலம் வரையில் நரகில் வைத்து அவர் தன் தண்டனையை அனுபவித்த பிறகு சொர்க்கத்தில் கொண்டு வரலாம். இதுவே ஸஹாபாக்கள், தாபியீன்கள் மற்றும் தபவுதாபியீன்கள் போன்ற அஹ்லுஸ் ஸுன்னாவின் கொள்கையாகும். தற்கொலை, வட்டி மற்றும் கொலை செய்வது போன்ற காரியங்களில் ஈடுபடுபவர் நிரந்தர நரகத்தில் இருப்பார் என்பது வழிகெட்ட பிரிவுகளான காரிஜியாக்கள் மற்றும் முஅதஜிலாக்களின் கொள்கையாகும்.

عَنْ أَبِى هُرَيْرَةَ أَنَّهُ قَالَ قِيلَ يَا رَسُولَ اللهِ مَنْ أَسْعَدُ النَّاسِ بِشَفَاعَتِكَ يَوْمَ الْقِيَامَةِ قَالَ رَسُولُ اللهِ صلى الله عليه وسلم لَقَدْ ظَنَنْتُ يَا أَبَا هُرَيْرَةَ أَنْ لاَ يَسْأَلَنِى عَنْ هَذَا الْحَدِيثِ أَحَدٌ أَوَّلُ مِنْكَ، لِمَا رَأَيْتُ مِنْ حِرْصِكَ عَلَى الْحَدِيثِ أَسْعَدُ النَّاسِ بِشَفَاعَتِى يَوْمَ الْقِيَامَةِ مَنْ قَالَ لاَ إِلَهَ إِلاَّ اللهُ، خَالِصًا مِنْ قَلْبِهِ أَوْ نَفْسِهِ» (البخاري- 99 )

அபூ ஹுரைரா ﵁ அவர்கள் கூறியதாவது, அல்லாஹ்வின் தூதரே! மறுமை நாளில் தங்களின் பரிந்துரைக்கு மனிதர்களிலேயே மிக நற்பாக்கியம் பெற்றவர் யார்? என நபி ﷺ அவர்களிடம் கேட்டேன். அப்போது அபூ ஹுரைராவே! எனது ஹதீஸ்களின் மீது உமக்கு இருக்கும் பேராவலை நான் அறிந்திருக்கிறேன்.

ஆகவேதான் இதனை உமக்கு முன்பு வேறு யாரும் கேட்க மாட்டார்கள் என நான் எண்ணியிருந்தேன். (எனது எண்ணம் சரியாகவே இருந்திருக்கிறது.) பிறகு நபி ﷺ அவர்கள் கூறினார்கள், மறுமை நாளில் எனது பரிந்துரைக்கு மனிதர்களிலேயே மிகவும் நற்பாக்கியம் பெற்றவர் யாரெனில் யார் தனது உள்ளத்திலிருந்து அல்லது மனதிலிருந்து கலப்பற்ற முறையில் தூய எண்ணத்துடன் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறினாரோ அவர்தான் என்றார்கள். (அறிவிப்பாளர்: அபூஹுரைரா நூல்: புகாரி - 99)

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை தூய எண்ணத்துடன் கூறியவர் தான் மறுமை நாளில் எனது பரிந்துரையை பெறுவதற்கு மனிதர்களிலேயே மிகவும் தகுதியானவர் என்று நபி ﷺ அவர்கள் கூறியதின் மூலம் லாஇலாஹா இல்லல்லாஹ்வின் சிறப்பை அறியலாம். மேலும் நபி ﷺ அவர்களின் பரிந்துரை பாவம் செய்தவர்களுக்கு உள்ளது போல் நல்லவர்களுக்கும் உள்ளது என்பதையும் அறியலாம்.

قَالَ رَسُولُ اللهِ صلى الله عليه وسلم «فَإِنَّ اللهَ قَدْ حَرَّمَ عَلَى النَّارِ مَنْ قَالَ لاَ إِلَهَ إِلاَّ اللهُ يَبْتَغِى بِذَلِكَ وَجْهَ اللهِ»

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள், அல்லாஹ்வின் முகத்தை நாடி எவர் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறினாரோ அவர் மீது அல்லாஹ் நரகத்தை (நிரந்தரமாக தங்குவதற்கு) ஹராமாக்கி விட்டான். (புகாரி - 425)

عَنْ أَبِى هُرَيْرَةَ رضى الله عنه أَنَّ رَسُولَ اللهِ صلى الله عليه وسلم قَالَ مَنْ قَالَ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ ، لَهُ الْمُلْكُ ، وَلَهُ الْحَمْدُ ، وَهُوَ عَلَى كُلِّ شَىْءٍ قَدِيرٌ . فِى يَوْمٍ مِائَةَ مَرَّةٍ ، كَانَتْ لَهُ عَدْلَ عَشْرِ رِقَابٍ ، وَكُتِبَتْ لَهُ مِائَةُ حَسَنَةٍ ، وَمُحِيَتْ عَنْهُ مِائَةُ سَيِّئَةٍ ، وَكَانَتْ لَهُ حِرْزًا مِنَ الشَّيْطَانِ يَوْمَهُ ذَلِكَ حَتَّى يُمْسِىَ ، وَلَمْ يَأْتِ أَحَدٌ بِأَفْضَلَ مِمَّا جَاءَ بِهِ ، إِلاَّ أَحَدٌ عَمِلَ أَكْثَرَ مِنْ ذَلِكَ»

(البخاري – 6403)

லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக்கலஹு லஹுல் முல்க்கு வலஹுல் ஹம்து வஹுவ அலா குல்லி ஷையின் கதீர் (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை யாருமில்லை. அவனுக்கே ஆட்சி அதிகாரம் உரியது. அவனுக்கே புகழ் அனைத்தும் உரியது. அவன் எல்லாவற்றின் மீதும் ஆற்றல் பெற்றவன்) என்று யார் ஒரு நாளில் நூறு முறை சொல்கின்றாரோ அவருக்கு அது பத்து அடிமைகளை விடுதலை செய்ததற்குச் சமமாகும்.

மேலும் அவருக்கு நூறு நன்மைகள் எழுதப்படும். அவரது கணக்கிலிருந்து நூறு தவறுகள் அழிக்கப்படும். மேலும் அந்நாளின் மாலை நேரம் வரும் வரை ஷைத்தானிடமிருந்து (பாதுகாக்கும்) அரணாகவும் அது அவருக்கு இருக்கும். மேலும் அவர் புரிந்த நற்செயலைவிட சிறந்ததை வேறு யாரும் செய்திட முடியாது. ஒருவர் இதைவிட அதிகமான ஒரு நற்செயல் புரிந்தாலே தவிர” என்று அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பவர்: அபூஹுரைரா رضي الله عنه நூல்: புகாரி 6403)

عَنْ عَبْدَ اللهِ بْنَ عَمْرٍو قَالَ قَالَ رَسُولُ اللهِ صلى الله عليه وسلم يُصَاحُ بِرَجُلٍ مِنْ أُمَّتِى يَوْمَ الْقِيَامَةِ عَلَى رُءُوسِ الْخَلاَئِقِ فَيُنْشَرُ لَهُ تِسْعَةٌ وَتِسْعُونَ سِجِلاًّ كُلُّ سِجِلٍّ مَدَّ الْبَصَرِ ثُمَّ يَقُولُ اللهُ عَزَّ وَجَلَّ هَلْ تُنْكِرُ مِنْ هَذَا شَيْئًا فَيَقُولُ لاَ يَا رَبِّ فَيَقُولُ أَظَلَمَتْكَ كَتَبَتِى الْحَافِظُونَ ثُمَّ يَقُولُ أَلَكَ عُذْرٌ أَلَكَ حَسَنَةٌ فَيُهَابُ الرَّجُلُ فَيَقُولُ لاَ. فَيَقُولُ بَلَى إِنَّ لَكَ عِنْدَنَا حَسَنَاتٍ وَإِنَّهُ لاَ ظُلْمَ عَلَيْكَ الْيَوْمَ فَتُخْرَجُ لَهُ بِطَاقَةٌ فِيهَا أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَأَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ قَالَ فَيَقُولُ يَا رَبِّ مَا هَذِهِ الْبِطَاقَةُ مَعَ هَذِهِ السِّجِلاَّتِ فَيَقُولُ إِنَّكَ لاَ تُظْلَمُ. فَتُوضَعُ السِّجِلاَّتُ فِى كِفَّةٍ وَالْبِطَاقَةُ فِى كِفَّةٍ فَطَاشَتِ السِّجِلاَّتُ وَثَقُلَتِ الْبِطَاقَةُ

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்: கியாமத் நாளில் படைப்பினங்களுக்கு முன்பு எனது சமுதாயத்திலிருந்து ஒரு நபர் அழைக்கப்படுவார். அம்மனிதருடைய (தீய) செயல்கள் அனைத்தும் தொன்னூற்று ஒன்பது பதிவேடுகளில் எழுதப்பட்டு விரிக்கப்பட்டி ருக்கும். ஒவ்வொரு பதிவேடும் கண்களுக்கு எட்டுகின்ற தூரம் வரையில் விரிக்கப்பட்டிருக்கும்.

அல்லாஹ் அம்மனிதரிடம் இவைகளில் எவற்றையேனும் நீ மறுக்கின்றாயா? என்று கேட்பான். அதற்கு அம்மனிதர் எனது இரட்சகனே! இவற்றில் எதையும் நான் மறுக்க மாட்டேன் என்று கூறுவார். அல்லாஹ் அம்மனிதரிடம் எனது கட்டளையின்படி எழுதும் பாதுகாப்பாளர்கள் (மலக்குகள்) ஏதேனும் உன் தொடர்பாக அநீதி இழைத்ததாக நினைக்கின்றாயா? என்று அம்மனிதரிடம் கேட்பான்.

பிறகு அல்லாஹ் அம்மனிதரிடம் உன்னிடத்தில் ஏதேனும் காரணங்கள் உள்ளதா? ஒரு நன்மையாயவது உள்ளதா? என்று கேட்பான். அம்மனிதர் திடுக்கிட்டவராக என்னிடம் எந்த நன்மையுமே இல்லை என்று கூறுவார்.

உனது ஒரு நன்மை நம்மிடம் உள்ளது, இன்றைய தினத்தில் உன்மீது எவ்வித அநீதியும் செய்யப்படமாட்டாது என்று அல்லாஹ் கூறுவான்.

ஒரு சீட்டு எடுக்கப்படும் அதில் லாஇலாஹா இல்லல்லாஹ் முஹம்மது ரஸூலுல்லாஹ் என்று அம்மனிதர் சாட்சி கூறியது இருக்கும். அம்மனிதர் எனது இரட்சகனே! எனது பாவங்கள் பதிவேடுகளில் நிரம்பியிருக்க இந்த ஒரு நன்மை அதற்கு முன்பு என்னவாகும் என்று கேட்பான்.

நிச்சயமாக உன்மீது அநியாயம் செய்யப்பட மாட்டாது என்று அல்லாஹ் கூறுவான். அவருடைய பாவங்கள் அடங்கிய பதிவேடுகள் தராசின் ஒரு பக்கத்திலும், லாஇலாஹா எழுதப்பட்ட சீட்டு இன்னொரு பக்கத்திலும் வைக்கப்படும். அவருடைய பாவங்கள் அடங்கிய பகுதி கனம் குறைந்து மேலே சென்றுவிடும். லாஇலாஹா இல்லல்லாஹ் எழுதப்பட்ட சீட்டு அடங்கிய பகுதி கனத்து கீழே வந்து விடும் என்று அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் பின் அம்ர் رضي الله عنه நூல் இப்னுமாஜா - 4442)

---------------

## معنى لا إله إلا الله

## லாஇலாஹா இல்லல்லாஹ்வின் பொருள்

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவிற்கான சரியான விளக்கத்தை தெரிந்திருப்பது முஸ்லிமாக இருக்கின்ற ஒவ்வொருவரின் மீதும் கட்டாய கடமையாக இருக்கிறது. இன்று லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை கூறுபவர்களில் அதிகமானவர்களுக்கு அதனுடைய உண்மையான பொருள் என்னவென்பது தெரியாமல் இருக்கிறது.

ஆகவேதான் அவர்கள் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறிக்கொண்டு அல்லாஹ்விற்கு இணைவைக்கின்றனர். எனவே, லாஇலாஹா இல்லல்லாஹ்வின் சரியான பொருளை ஒருவர் அறிந்திருந்தால் மட்டுமே இணைவைத்தல் என்ற பெரும்பாவத்திலிருந்து தப்பித்து நேர்வழியில் அவர் இருக்க முடியும். கலிமாவின் சரியான பொருள் என்னவென்பதை இனி பார்ப்போம்!

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவிற்கு பொருள் கூறும் போது முஸ்லிம்களில் சிலர், லாஇலாஹா இல்லல்லாஹ் என்றால் அல்லாஹ் இருக்கிறான் அவனைத் தவிர வேறு யாரும் இல்லை என்றும்,[1] வேறு

---

1. அல்லாஹ் இருக்கிறான் அவனைத் தவிர வேறு யாருமில்லை என்பதின் மூலம் ஒருவர், உலகிலுள்ள அனைத்து பொருட்களிலும் அல்லாஹ் இருக்கிறான். தூணிலும் இருக்கிறான், துரும்பிலும் இருக்கிறான். அல்லது அனைத்து பொருட்களும் அல்லாஹ்விடமிருந்து வெளிப்பட்டது அவனுக்குள்ளேயே அவை அனைத்தும் சங்கமிக்கும் என்ற நம்பிக்கையிலிருந்து கூறினால் அவரின் நம்பிக்கை தெளிவான குஃப்ராகும். இந்த நம்பிக்கையில் ஒருவன் மரணித்தால் அவன் நிரந்தர நரகவாசியாக ஆகிவிடுவான்.

அல்லாஹ் இருக்கிறான் அவனைத்தவிர வேறு யாருமில்லை என்பதின் மூலம் அல்லாஹ் இருக்கிறான் அவன்தான் நம்மை படைத்தான் என்ற அளவில் இருந்து கூறினால் அந்த நம்பிக்கை சரியாகும். எனினும் இது லாஇலாஹா இல்லல்லாஹ்வின் பொருளாகாது!

சிலர் படைப்பாளன் அல்லாஹ்வை தவிர வேறு யாருமில்லை என்றும், இன்னும் சிலர் அல்லாஹ்வைத் தவிர இறைவன் யாருமில்லை என்றும், இன்னும் சிலர் ஆட்சி அதிகாரம் அல்லாஹ்வை தவிர வேறு யாருக்கும் இல்லை என்றும் பொருள் கொடுக்கின்றனர்.

இவை கலிமாவின் சரியான பொருளாகுமா? நபி ﷺ அவர்கள் ஸஹாபாக்களுக்கு என்ன விளக்கம் அளித்தார்கள்? என்பதற்கான பதில்களை அறிவதற்கு முன்பு மக்கத்து காஃபிர்கள் அல்லாஹ்வை பற்றி எந்த விதமான நம்பிக்கையில் இருந்தார்கள் என்பதை அறிவது இவ்விஷயத்தில் தெளிவை ஏற்படுத்தும்.

﴿وَلَئِنْ سَأَلْتَهُمْ مَنْ خَلَقَ السَّمَاوَاتِ وَالْأَرْضَ لَيَقُولُنَّ اللهُ قُلِ الْحَمْدُ للهِ بَلْ أَكْثَرُهُمْ لَا يَعْلَمُونَ﴾

வானங்களையும் பூமியையும் படைத்தவன் யார்? என்று நீர் அவர்களைக் கேட்பீராயின் அ(தற்க)வர்கள் அல்லாஹ் என்று நிச்சயமாக கூறுவார்கள். புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே என்று கூறுவீராக! எனினும் அவர்களில் பெரும்பாலோர் அறிய மாட்டார்கள். (அல்குர்ஆன் 31:25)

﴿قُلْ مَنْ يَرْزُقُكُمْ مِنَ السَّمَاءِ وَالْأَرْضِ أَمَّنْ يَمْلِكُ السَّمْعَ وَالْأَبْصَارَ وَمَنْ يُخْرِجُ الْحَيَّ مِنَ الْمَيِّتِ وَيُخْرِجُ الْمَيِّتَ مِنَ الْحَيِّ وَمَنْ يُدَبِّرُ الْأَمْرَ فَسَيَقُولُونَ اللهُ فَقُلْ أَفَلَا تَتَّقُونَ﴾

வானத்திலிருந்தும் பூமியிலிருந்தும் உங்களுக்கு உணவளிப்பவன் யார்? செவிப்புலனையும், பார்வைகளையும் சொந்தமாக்கிக் கொண்டிருப்பவன் யார்? இறந்ததிலிருந்து உயிருள்ளதை வெளிப்படுத்துபவனும் உயிருள்ள திலிருந்து இறந்ததை வெளிப்படுத்துபவனும் யார்? (அகிலத்தாரின்) சகல காரியங்களைத் திட்டமிட்டு நிகழ்த்துபவனும் யார்? என (நபியே) நீர் (அவர்களைக்) கேட்பீராக! அ(தற்க)வர்கள் அல்லாஹ்தான் என்று கூறுவார்கள். அவ்வாறாயின் (அவனுக்கு) நீங்கள் பயப்படமாட்டீர்களா? என்று நீர் கூறுவீராக! (அல்குர்ஆன் 10:31)

இந்த வசனங்களிலிருந்து மக்கத்து காஃபிர்கள் அல்லாஹ்வைத்தான் படைப்பாளனாகவும், இறைவனாகவும், அவனே மனிதர்களுக்கு உணவளிக்கின்றவனாகவும் இருக்கிறான் என்பதை ஏற்றிருந்தார்கள் என்பதை அறியமுடிகிறது.

லாஇலாஹா இல்லல்லாஹ் என்பதற்கு படைப்பாளன் அல்லாஹ்வை தவிர வேறு யாருமில்லை, இறைவன் அல்லாஹ்வை தவிர வேறு யாருமில்லை என்பதுதான் பொருள் என்றால் மக்கத்து காஃபிர்கள் இந்த பொருளை ஏற்று தான் இருந்தார்கள்.

- இவ்வாறு அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டிருந்த அம்மக்களின் நம்பிக்கையை அல்லாஹ் ஏன் ஏற்கவில்லை?

- அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டிருந்த அம்மக்களை அல்லாஹ் ஏன் காஃபிர் என்று கூறுகிறான்?

- லாஇலாஹா இல்லல்லாஹ்விற்கு படைப்பாளன், இறைவன், ஆட்சியாளன் என்பது தான் சரியான பொருள் என்றால், அப்பொருளை மக்கத்து காஃபிர்கள் ஏற்றுத்தானே இருந்தார்கள். பிறகு ஏன் லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை அவர்கள் கூற மறுத்தார்கள்?

ஆக லாஇலாஹா இல்லல்லாஹ்விற்கு படைப்பாளன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை, இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை, ஆட்சியாளன் அல்லாஹ்வை தவிர வேறு யாருமில்லை என்று கூறுவதெல்லாம் சரியான பொருளாகாது!

சிலர், லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவிற்கு பொருள் கூறும்போது வஸ்துக்க(பொருட்க)ளை கொண்டு எதுவும் ஆகுவதில்லை, அல்லாஹ்வைக் கொண்டே அனைத்தும் ஆகிறது என்று கூறுகிறார்கள்.

இவ்வாறு லாஇலாஹா இல்லல்லாஹ்விற்கு பொருள் கொள்வது தவறான கொள்கையாகும். ஏனெனில் மக்கத்து காஃபிர்கள் கூட தங்களின் தெய்வங்கள் தொடர்பாக அவைகளுக்கு படைப்பதிலோ, பரிபாலிப்பதிலோ, ஆட்சியிலோ, அதிகாரத்திலோ எவ்வித பங்குமில்லை என்பதை அறிந்துத்தான் இருந்தார்கள். ஆகவேதான் தங்களின் தெய்வங்கள்

தொடர்பாக, எங்களுக்காக இவர்கள் பரிந்துரை செய்வார்கள் என்று கூறினார்கள்.

﴿وَيَعْبُدُونَ مِنْ دُونِ اللهِ مَا لَا يَضُرُّهُمْ وَلَا يَنْفَعُهُمْ وَيَقُولُونَ هَؤُلَاءِ شُفَعَاؤُنَا عِنْدَ اللهِ﴾

மேலும் அல்லாஹ்வையன்றி தங்களுக்கு இடர் அளிக்காதவற்றை இன்னும் தங்களுக்கு பலன் அளிக்காதவற்றை அவர்கள் வணங்குகிறார்கள். இவர்கள் அல்லாஹ்விடத்தில் எங்களுக்கு பரிந்துரையாளர்கள் என்றும் அவர்கள் கூறுகின்றனர். (அல்குர்ஆன் 18:10)

## லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவிற்கான சரியான பொருள்

لا إله إلا الله – لا معبود بحق إلا الله

உண்மையாகவே வணங்குவதற்கு தகுதியானவன் அல்லாஹ்வை தவிர வேறு யாருமில்லை என்று கூறுவதே லாஇலாஹா இல்லல்லாஹ்வின் சரியான பொருளாகும்.

நபி ﷺ அவர்கள் ஸஹாபாக்களுக்கு கலிமாவின் பொருளாக இதனையே கூறினார்கள். ஆகவே தான் ஸஹாபாக்கள் அனைவரும் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று சாட்சி கூறிய பிறகு அல்லாஹ்வை மட்டுமே வணங்கினார்கள், அவனைத் தவிர வேறு எதனையும் வணங்காமல் இருந்தார்கள்.

மேலும், நபி ﷺ அவர்களின் காலத்தில் வாழ்ந்த மக்கத்து காஃபிர்கள் கூட லாஇலாஹ் இல்லல்லாஹ்வின் சரியான பொருளை அறிந்து வைத்திருந்தார்கள். ஆகவேதான் அவர்கள் அல்லாஹ்வை படைப்பாள னாகவும், எஜமானாகவும் ஏற்றிருந்த போதிலும் கூட லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை கூற மறுத்தார்கள்.

லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறினால் வணக்கங்கள் அனைத்தையும் அல்லாஹ் ஒருவனுக்கு மட்டுமே செய்ய வேண்டும். அவனைத் தவிர வேறு யாரையும் வணங்காமல் இருக்க வேண்டும் என்பதை மக்கத்து

காஃபிர்கள் அறிந்திருந்தார்கள். ஆகவேதான் நபி ﷺ அவர்கள் அம்மக்களை கலிமாவின் பக்கம் அழைத்த போது அதனை ஏற்க மறுத்தார்கள். அல்லாஹ் தனது அருள்மறையில் இது பற்றி கூறுகிறான்,

﴿أَجَعَلَ الْآلِهَةَ إِلَٰهًا وَاحِدًا إِنَّ هَٰذَا لَشَيْءٌ عُجَابٌ﴾

(என்ன) இவர் (நம்முடைய வணக்கதிற்குரிய) தெய்வங்களை (நிராகரித்து விட்டு) ஒரே வணக்கத்திற்குரியவனாக ஆக்கி விட்டாரா? நிச்சயமாக இது ஓர் ஆச்சரியமான விஷயம்தான் (என்றும் கூறினர்). (அல்குர்ஆன் 38:5)

﴿إِنَّهُمْ كَانُوا إِذَا قِيلَ لَهُمْ لَا إِلَٰهَ إِلَّا اللَّهُ يَسْتَكْبِرُونَ وَيَقُولُونَ أَئِنَّا لَتَارِكُو آلِهَتِنَا لِشَاعِرٍ مَجْنُونٍ﴾

அல்லாஹ்வைத் தவிர வேறொரு (வணக்கத்திற்குரிய) நாயன் இல்லை! என்று அவர்களுக்கு கூறப்பட்டால் நிச்சயமாக அவர்கள் பெருமையடிப்ப வர்களாக இருந்தனர். நாங்கள் பைத்தியக்காரரான ஒரு கவிஞருக்காக எங்களுடைய வணக்கத்திற்குரிய(வர்களான தெய்வங்)களை நிச்சயமாக விட்டு விடுகின்றவர்களா? என்றும் அவர்கள் கூறுபவர்களாக இருந்தனர். (அல்குர்ஆன் 37:35-36)

ஆக, மக்கத்து காஃபிர்கள் கூட லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறினால் அல்லாஹ்வை மட்டுமே வணங்க வேண்டும், அவனைத் தவிர வேறு யாரையும் வணங்க கூடாது என்று விளங்கியிருந்தார்கள். ஆகவேதான் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று சாட்சி கூற மறுத்தார்கள். அல்லாஹ்வையும் வணங்குவோம், அல்லாஹ் அல்லாத மற்ற போலியான தெய்வங்களையும் வணங்குவோம் என கூறி தங்களின் இணைவைப்பு கொள்கையில் நிலைத்து நின்றார்கள்.

ஆனால், இன்று லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவைக் கூறும் முஸ்லிம்களில் பலர் அதனுடைய உண்மையான பொருளை அறியாமல் இருக்கின்றார்கள். ஆகவேதான் லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவிற்கு சாட்சியளித்து அல்லாஹ்விற்கு இணைவைக்கின்றார்கள்.

ஆக மக்கத்து காஃபிர்கள் லாஇலாஹா இல்லல்லாஹ்வின் பொருளை அறிந்ததால் அக்கலிமாவை ஏற்காமல் அல்லாஹ்விற்கு இணை வைத்தார்கள். இன்றைய முஸ்லிம்கள் லாஇலாஹா இல்லல்லாஹ்வின் பொருளை அறியாமல் அக்கலிமாவை ஏற்றுக்கொண்டு அல்லாஹ்விற்கு இணைவைத்து கொண்டிருக்கிறார்கள்.

லாஇலாஹா இல்லல்லாஹ் என்று ஒருவர் சாட்சி கூறினால், அவர் அனைத்து போலியான தெய்வங்களின் வணக்கத்தை விட்டுவிட்டு அல்லாஹ் ஒருவனை மட்டுமே வணங்குவேன் என்பதை பிரகனப் படுத்துகிறார் என்பதை சாட்சி கூறுபவர் அவசியமாக அறிய வேண்டும்.

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவிற்கு பொருள் கூறும்போது, உண்மையாகவே வணங்குவதற்கு தகுதியானவன் அல்லாஹ்வை தவிர வேறு யாருமில்லை என்று கூறுகிறோம். இதில் உண்மையாகவே என்ற வாசகத்தை கூற வேண்டிய அவசியம் என்ன? என்று பார்த்தால், மக்கள் தங்களின் வணக்கங்களை அல்லாஹ்வை தவிர மற்றவர்களுக்கும் செய்து வருகின்றனர்.

ஆகவே தான் கல்லையும், மண்ணையும் மரத்தையும், கற்பாறையையும் வணங்குகின்றனர். இவ்வாறு வணக்கங்கள் அல்லாஹ் அல்லாதவர்களுக்கு செலுத்தப்பட்டாலும் அல்லாஹ்வை தவிர்த்து வணங்கப்படக்கூடிய அனைத்துமே போலியாகும். அல்லாஹ்வை வணங்குவது மட்டுமே சத்தியமாகவும் உண்மையாகவும் இருக்கிறது.

இந்த வித்தியாசத்தை தெரியப்படுத்துவதற்குத்தான் உண்மையாகவே வணங்குவதற்கு தகுதியானவன் அல்லாஹ்வை தவிர வேறு யாருமில்லை என்று கூறுகிறோம். அல்லாஹ்வும் இதனைப் பற்றி தனது அருள் மறையில் கூறுகிறான்,

﴿ذَلِكَ بِأَنَّ اللهَ هُوَ الْـحَقُّ وَأَنَّ مَا يَدْعُونَ مِنْ دُونِهِ هُوَ الْبَاطِلُ وَأَنَّ اللهَ هُوَ الْعَلِيُّ الْكَبِيرُ﴾

நிச்சயமாக அல்லாஹ் அவன்தான் உண்மையா(கவே வணங்குவதற்கு தகுதியா)னவன். மேலும் அவனையன்றி (வேறு) எதை அவர்கள்

பிரார்த்திக்கின்றார்களோ அதுவே பொய்யானதாகும். இன்னும் நிச்சயமாக அல்லாஹ் அவன்தான் மிக உயர்ந்தவன் மிகப் பெரியவன். (அல்குர்ஆன் 22:62)

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவிற்கு பொருள் கூறும்போது, வணக்கத்திற்கு தகுதியானவன் என்று கூறுகிறோம். இதில் வணக்கத்திற்கு தகுதியானவன் என்று பொருள் கொள்வதற்கு ஆதாரமாக இவ்வசனத்தை கூறலாம்,

﴿أَنْ لَا تَعْبُدُوا إِلَّا اللهَ إِنِّي أَخَافُ عَلَيْكُمْ عَذَابَ يَوْمٍ أَلِيمٍ﴾

அல்லாஹ்வைத் தவிர மற்ற எதனையும் நீங்கள் வணங்காதீர்கள். (அவ்வாறு மற்ற எதனையும் நீங்கள் வணங்கினால்) துன்புறுத்தும் தேவதனையை நிச்சயமாக நான் உங்களின் மீது பயப்படுகின்றேன். (11:26)

அல்லாஹ் அல்குர்ஆனில் லாஇலாஹா என்ற வார்த்தை இடம் பெற வேண்டிய இடத்தில் (**لا تعبدوا**) என்ற வார்த்தையை கூறுகிறான். ஆக லாஇலாஹா என்னும் கலிமாவில் இலாஹ் என்பது வணக்கத்திற்குரியவன் என்ற பொருளில் தான் உள்ளது. ஆக

لا إله إلا الله – لا معبود بحق إلا الله

உண்மையாகவே வணக்கத்திற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று கூறுவதே லாஇலாஹா இல்லல்லாஹ்வின் சரியான பொருளாகும்.

---------------

حقيقة توحيد الحاكمية

## ஆட்சியாளன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை

லாஇலாஹா இல்லல்லாஹ்விற்கான சரியான பொருள் என்ன என்பதைப் பற்றி மேலே நாம் பார்த்தோம். எனினும் நாம் வாழும் இக்காலத்தில் இதனை அறியாத சிலர் ஆட்சி அதிகாரத்திற்குரியவன், சட்டங்களை இயற்றுபவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்பது தான் லாஇலாஹா இல்லல்லாஹ்வின் பொருள் என நம்பி, அதன் பக்கம் மக்களை அழைக்கின்றனர். ஆகவே இது பற்றிய சரியான விளக்கத்தை தெரியப்படுத்துவது அவசியமாக இருப்பதினால் இதனை விரிவாக பார்ப்போம்!

லாஇலாஹா இல்லல்லாஹ்விற்கு ஆட்சி அதிகாரம் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருக்குமில்லை என்று பொருள் கொள்வது தவறாகும். ஏனெனில் ஒருவர் அல்லாஹ் கூறிய சட்டங்களின் அடிப்படையில்தான் தீர்ப்பளிக்க வேண்டும் என்று மனித உரிமைகளிலும், குற்றவியல் சட்டங்களிலும் தீர்ப்பளிக்கின்றார். ஆனால் வணக்க வழிபாடுகளில் அல்லாஹ்விற்கு இணைவைக்கிறார் எனில், அல்லாஹ்வின் சட்டங்களை பின்பற்றுவதினால் அவருக்கு எவ்வித பயனும் ஏற்பட போவதில்லை. மேலும் அவர் இஸ்லாத்தின் பார்வையில் இணைவைப்பாளர் ஆவார்.

எனவேதான் ஆட்சி அதிகாரத்திற்குரியவன், சட்டங்களை இயற்றுபவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்பது லாஇலாஹா இல்லல்லாஹ்வின் முழுமையான பொருளாகாது என்று மார்க்கம் கூறுகிறது. எனினும் இவ்வாறு கூறுவது லாஇலாஹா இல்லல்லாஹ்வின் பொருளின் ஒரு பகுதியாக இருக்கிறது.

இதனை இன்னும் விளக்கமாக சொல்வதென்றால் வணங்குவதற்கு தகுதியாக இருக்கின்ற அல்லாஹ்தான் படைப்பாளனாகவும் இருக்க முடியும். அவ்வாறே வணங்குவதற்கு தகுதியானவனாக இருக்கின்ற அல்லாஹ்தான் சட்டங்களை மனிதர்கள் மீது விதிப்பவனாக இருக்க முடியும். எனவே, அல்லாஹ் விதித்த சட்டங்களை மட்டுமே பின்பற்றுவது அவனது அடியார்கள் மீது கடமையாக இருக்கிறது. ஆகவே அல்லாஹ் விதித்த சட்டங்களின் அடிப்படையிலேயே வணக்கங்களையும், ஹலாலையும், ஹராமையும் மற்றும் நடைமுறைகளையும் அமைத்துக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு ஒரு மனிதன் அல்லாஹ்வின் சட்டங்களை பின்பற்றி நடக்கும் போது அதுவும் வணக்கமாக ஆகிவிடுகிறது. இதனை விளங்குவதற்கு கீழே குறிப்பிடப்பட்டுள்ள ஹதீஸை பார்க்கலாம்.

عَنْ عَدِيِّ بْنِ حَاتِمٍ قَالَ: أَتَيْتُ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ وَهُوَ يَقْرَأُ سُورَةَ بَرَاءَةَ فَقَرَأَ هَذِهِ الْآيَةَ ﴿اتَّخَذُوا أَحْبَارَهُمْ وَرُهْبَانَهُمْ أَرْبَابًا مِنْ دُونِ اللهِ﴾ حَتَّى فَرَغَ مِنْهَا، فَقُلْتُ: إِنَّا لَسْنَا نَعْبُدُهُمْ، فَقَالَ: «أَلَيْسَ يُحَرِّمُونَ مَا أَحَلَّ اللهُ فَتُحَرِّمُونَهُ، وَيُحِلُّونَ مَا حَرَّمَ اللهُ فَتَسْتَحِلُّونَهُ؟» قُلْتُ: بَلَى، قَالَ: «فَتِلْكَ عِبَادَتُهُمْ»

நபி ﷺ அவர்கள் இவ்வசனத்தை அதீ பின் ஹாதீம் رضي الله عنه முன்னிலையில் (இவ்வாறே) அவர்கள் அல்லாஹ்வையன்றி தங்கள் பாதிரிகளையும், தங்கள் சந்நியாசிகளையும் தெய்வங்களாக எடுத்துக் கொண்டனர். (அல்குர்ஆன் 9:31) என்ற வசனத்தை ஓதும் போது அவர்கள், அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் எங்கள் மத குருமார்களையும் பாதிரிமார்களையும் வணங்கியதில்லையே? என்றார்கள். அப்போது நபி ﷺ அவர்கள் அல்லாஹ் ஹராமாக்கியதை உங்களது மதகுருமார்கள் ஹலாலாக்கினால் நீங்கள் அதனை ஹலாலாக்கி கொள்ள மாட்டீர்களா? அல்லாஹ் ஹலாலாக்கியதை உங்கள் மதகுருமார்கள் ஹராமாக்கினால் அதனை நீங்கள் ஹராமாக்கி கொள்ள மாட்டீர்களா? என்று கேட்டார்கள்.

அதற்கு அதீ ﵁ அவர்கள், ஆம் நாங்கள் அவ்வாறே செய்வோம் என்றார்கள். அப்போது நபி ﷺ அவர்கள் இவ்வாறு செய்வதுதான் அந்த மதகுருமார்களை வணங்குவதாகும் என்றார்கள். (அறிவிப்பாளர்: அதீ பின் ஹாதீம், நூல்: தப்ரானி - 218) ஹசன்.

ஹலால் மற்றும் ஹராம் தொடர்பானவற்றில் மதகுருமார்களுக்கு கீழ்ப்படிவது அவர்களை வணங்குவதாகும் என்று நபி ﷺ அவர்கள் கூறுகிறார்கள். இதிலிருந்து ஹலால் மற்றும் ஹராமில் அல்லாஹ்விற்கு மட்டுமே கீழ்ப்படிய வேண்டும், அவனைத்தவிர வேறு யாருக்கும் கீழ்ப்படிய கூடாது.

இவ்வாறு அல்லாஹ்விற்கு மட்டுமே கீழ்ப்படிவது வணக்கமாகும். அல்லாஹ்வின் சட்டங்களுக்கு கீழ்படியாமல் மற்றவர்களின் சட்டங்களுக்கு கீழ்படிவது இணைவைப்பாகும். இதனையே (شرك الطاعة) கீழ்படிவதில் இணைவைப்பது என்று பெரிய ஷிர்க்கின் வகைகளில் ஒன்றாக மார்க்கம் கூறுகிறது.[1]

ஆக சட்டங்களை இயற்றும் அதிகாரம் அல்லாஹ்விற்கு மட்டுமே உள்ளது என்ற பொருளை லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமா உள்ளடக்கியிருக்கிறது. எனினும் இது லாயிலாஹ இல்லல்லாஹ்வின் முழுமையான பொருளாகாது. மாறாக லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவின் பொருளின் ஒரு பகுதியாக இருக்கிறது.

கலிமாவின் பொருளின் ஒரு பகுதியாக இருப்பதை கலிமாவின் முழுமையான பொருளாக எடுத்துக் கொண்டு, இணைவைத்தலில் முழ்கியிருக்கும் மக்களை அதன் பக்கம் அழைப்பது நபிமார்களின் அழைப்பு பணிக்கு எதிரானதாகும். இஸ்லாத்தின் பக்கம் அழைப்பதற்காக அனுப்பப்பட்ட நபிமார்கள் அனைவரும் அல்லாஹ் ஒருவனை மட்டுமே

---

1. நாம் வாழும் நாட்டில் இஸ்லாமிய சட்டங்களில் முஸ்லிம் தனியார் சட்டம் என்ற அடிப்படையில் திருமணம், பலதாரமணம், விவகாரத்து மற்றும் சொத்துரிமை போன்ற நிகழ்வுகளை இஸ்லாமிய சட்டத்தின்படி செயல்படுவதற்கு அனுமதி அளிக்கப்பட்டுள்ளது. எனவே, இவற்றில் இஸ்லாமிய சட்டங்களையே செயல்படுத்த வேண்டும். குற்றவியல் போன்ற கிரிமினல் சட்டங்களை இந்த நாட்டில் செயல்படுத்த முடியாத சூழ்நிலையில் அச்சட்டங்களை நிர்பந்தத்தின் காரணமாக விடுபவர்களாக நாம் ஆகிவிடுவோம்.

வணங்க வேண்டும். அவனைத்தவிர வேறு யாரையும் வணங்கக் கூடாது என்ற கொள்கையின் பக்கம்தான் மக்களை அழைத்தார்கள்.

وَلَقَدْ بَعَثْنَا فِي كُلِّ أُمَّةٍ رَسُولًا أَنِ اعْبُدُوا اللهَ وَاجْتَنِبُوا الطَّاغُوتَ

ஒவ்வொரு சமூகத்திலும் திட்டமாக நாம் ஒரு தூதரை அனுப்பியிருக் கிறோம். (அத்தூதர் அச்சமூகத்தவர்களிடம்) அல்லாஹ்வையே வணங்குங்கள். (அல்லாஹ் அல்லாத வணங்கப்படும் ஷைத்தான்களாகிய அனைத்து) தாகூத்துகளிலிருந்தும் நீங்கள் விலகிக் கொள்ளுங்கள் (என்று கூறினார்கள்) (அல்குர்ஆன் 16:36)

இதனை அடிப்படையாக கொண்டே நாமும் நமது அழைப்பையும் பிரச்சாரத்தையும் மேற்கொள்ள வேண்டும்.

அல்லாஹ்வின் சட்டத்தில் முதன்மையானது லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை பற்றிப்பிடிப்பதும், ஷிர்க் எனும் இணைவைத்தலை விட்டு விலகியும் இருப்பதே ஆகும். எனவே அல்லாஹ்வின் சட்டத்தை நிலைநாட்ட வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர்கள், முதலில் தவ்ஹீதின் பக்கம் மக்களை அழைக்க வேண்டும். ஷிர்க்கை பற்றிய எச்சரிக்கையை செய்ய வேண்டும்.

ஆனால் இன்று நிலைமை என்னவாக இருக்கிறது? அல்லாஹ்வின் சட்டத்தை நிலைநாட்ட விரும்புபவர்களே தவ்ஹீதுக்கு எதிரான கொள்கையில் இருக்கின்றனர். ஷிர்க் என்ற இணைவைப்பு கொள்கையில் முழ்கியவர்களாகவும், அதனை ஆதரிப்பவர்களாகவும் இருக்கின்றனர். இங்கு இவர்களின் அடிப்படையிலேயே கோளாறு இருக்கிறது. இந்த நிலையில் இவர்கள் அல்லாஹ்வின் சட்டத்தை எவ்வாறு நிலை நாட்டுவார்கள்?

அல்லாஹ்வின் சட்டத்தில் முதன்மையாக உள்ள லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவின் பக்கமே நபிமார்கள் மக்களை அழைத்தார்கள். அதன் பக்கமே நாமும் மக்களை அழைப்போம்!

---------------

# أركان لا إله إلا الله

## லாஇலாஹா இல்லல்லாஹ்வின் அடிப்படைகள்

லாஇலாஹா இல்லல்லல்லாஹ் என்ற கலிமா இரண்டு அடிப்படைகளை உள்ளடக்கியிருக்கிறது

1 - النفي மறுப்பது

2 - الثبوت உறுதிப்படுத்துவது

(لاإله) லாஇலாஹா என்பதில் வணக்கத்திற்குரியவன் யாருமே இல்லை என அனைத்து வணங்கப்படக்கூடிய தெய்வங்களையும் மறுக்கப்படுகிறது.

(إلاالله) இல்லல்லாஹ் என்பதில் அல்லாஹ்வை தவிர என்று வணக்கங்கள் அனைத்தையும் அல்லாஹ் ஒருவனுக்கு மட்டுமே செய்ய வேண்டும் என உறுதிப்படுத்தப்படுகிறது.

இந்த இரண்டு அடிப்படைகளையும் ஒருவர் நம்பி லாஇலாஹா இல்லல்லாஹ் கூறினால் மட்டுமே அவரது நம்பிக்கை ஏற்றுக் கொள்ளப்படும். ஆகவேதான் அல்லாஹ் அல்குர்ஆனில் பல இடங்களில் இந்த இரண்டு அடிப்படைகளையும் இணைத்தே கூறுகிறான்,

﴿وَاعْبُدُوا اللهَ وَلَا تُشْرِكُوا بِهِ شَيْئًا﴾

மேலும் அல்லாஹ்வையே வணங்குங்கள் அவனுக்கு யாதொன்றையும் இணையாக்காதீர்கள். (அல்குர்ஆன் 4:36)

இவ்வசனத்தில் அல்லாஹ்வை மட்டுமே வணங்க வேண்டும் என்பதை உறுதிப்படுத்தியும், அவனைத் தவிர வேறு எந்த ஒன்றையும் வணங்காதீர்கள் என்று மறுத்தும் கூறுகிறான்.

﴿فَقَالَ يَا قَوْمِ اعْبُدُوا اللهَ مَا لَكُمْ مِنْ إِلَهٍ غَيْرُهُ﴾

அப்பொழுது அவர் (அவர்களிடம்) என்னுடைய சமூகத்தாரே! நீங்கள் அல்லாஹ்வை வணங்குங்கள், அவனைத்தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை என்று கூறினார். (அல்குர்ஆன் 7:59)

﴿وَلَقَدْ بَعَثْنَا فِي كُلِّ أُمَّةٍ رَسُولًا أَنِ اعْبُدُوا اللهَ وَاجْتَنِبُوا الطَّاغُوتَ﴾

ஒவ்வொரு சமூகத்திலும் திட்டமாக நாம் ஒரு தூதரை அனுப்பியிருக்கிறோம். (அத்தூதர் அம்மக்களிடம்) அல்லாஹ்வை மட்டுமே வணங்குங்கள், அல்லாஹ் அல்லாத வணங்கப்படும் ஷைத்தான்களாகிய அனைத்து) தாகூத்திலிருந்தும் நீங்கள் விலகிக் கொள்ளுங்கள் என்று கூறினார்கள். (அல்குர்ஆன் 16:36)

அல்லாஹ் கூறுகிறான்,

﴿فَاعْلَمْ أَنَّهُ لَا إِلَهَ إِلَّا اللهُ وَاسْتَغْفِرْ لِذَنْبِكَ وَلِلْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ﴾

நிச்சயமாக அல்லாஹ்வைத் தவிர (வணக்கத்திற்குரியவர் வேறு) யாரும் இல்லை என்பதை நீர் அறிந்து கொள்வீராக! உம்முடைய பாவத்திற் காகவும், விசுவாசங்கொண்ட ஆண்களுக்காவும், விசுவாசங்கொண்ட பெண்களுக்காவும் பாவமன்னிப்பு கோருவீராக! (அல்குர்ஆன் 47:19)

﴿فَمَنْ يَكْفُرْ بِالطَّاغُوتِ وَيُؤْمِنْ بِاللهِ فَقَدِ اسْتَمْسَكَ بِالْعُرْوَةِ الْوُثْقَى لَا انْفِصَامَ لَهَا وَاللهُ سَمِيعٌ عَلِيمٌ﴾

எனவே, எவர் தாகூத்தை (ஷைத்தானை) நிராகரித்து விட்டு அல்லாஹ்வை (மட்டும்) விசுவாசிக்கிறாரோ அவர் திட்டமாக அறுந்து போகாத பலமான கயிறைப் பற்றிப் பிடித்துக் கொண்டார். மேலும் அல்லாஹ் செவியேற்கிறவன், நன்கறிகிறவன். (அல்குர்ஆன் 2:256)

இவ்வசனத்தில் தாகூத்தை நிராகரித்து விட்டு என்பது அனைத்து போலியான தெய்வங்களின் வணக்கத்தை மறுத்தும், அல்லாஹ்வை

மட்டுமே விசுவாசிக்க வேண்டும் என்பது வணக்கங்கள் அனைத்தையும் அவன் ஒருவனுக்கு மட்டுமே செய்ய வேண்டும் என்று உறுதிப் படுத்தியும் கூறப்பட்டுள்ளது.

مَنْ قَالَ لَا إِلَهَ إِلَّا اللهُ وَكَفَرَ بِمَا يُعْبَدُ مِنْ دُونِ اللهِ حَرُمَ مَالُهُ وَدَمُهُ وَحِسَابُهُ عَلَى اللهِ

நபி ﷺ அவர்கள் கூறினார்கள், எவரொருவர் உண்மையான வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை எனக் கூறி அல்லாஹ்வை தவிர்த்து வணங்கப்படக்கூடிய அனைத்து போலியானவற்றையும் நிராகரிக்கின்றாரோ அவருடைய செல்வம், இரத்தம் புனிதமாகும். அவரது கேள்வி கணக்கு அல்லாஹ்விடம் உள்ளது. (முஸ்லிம்)

عَنْ مُعَاذٍ قَالَ أَنَا رَدِيفُ النَّبِيِّ صلى الله عليه وسلم فَقَالَ يَا مُعَاذُ قُلْتُ لَبَّيْكَ وَسَعْدَيْكَ . ثُمَّ قَالَ مِثْلَهُ ثَلاَثًا هَلْ تَدْرِى مَا حَقُّ اللهِ عَلَى الْعِبَادِ أَنْ يَعْبُدُوهُ وَلاَ يُشْرِكُوا بِهِ شَيْئًا

நபி ﷺ அவர்கள் என்னிடம் மனிதர்கள் மீது அல்லாஹ்விற்கு செய்ய வேண்டிய கடமை என்னவென்பதை நீங்கள் அறிவீர்களா? என்று கேட்டுவிட்டு அவன் ஒருவனை மட்டுமே வணங்கி அவனுக்கு எந்த ஒன்றையும் இணையாக்காமல் இருப்பதே ஆகும் என்றார்கள். (அறிவிப்பாளர்: முஆத் பின் ஜபல் رضي الله عنه நூல்: புகாரி - 6267)

**இமாம் இப்னுல் கய்யிம் (رحمه الله) அவர்கள் கூறுகிறார்கள்:**

அல்லாஹ் வணக்கத்திற்குரியவனாக இருக்கிறான் என்று கூறுவதைவிட வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வை தவிர வேறு யாருமில்லை என்று கூறுவது வலிமையான பொருளை கொண்டுள்ளது. அல்லாஹ் வணக்கத்திற்குரியவனாக இருக்கிறான் என்று கூறுவது அல்லாஹ்வை தவிர வேறு யாரும் வணக்கத்திற்குரியவனாக இல்லை என்ற

பொருளைத் தராது. ஆனால் வணகத்திற்குரியவன் அல்லாஹ்வை தவிர வேறு யாருமில்லை என்று கூறுவது அல்லாஹ்வை தவிர வேறு யாரும் வணக்கத்திற்கு தகுதியானவர்கள் இல்லை என்ற பொருளைத் தரும்.

இந்த இரண்டு அடிப்படைகளின் மீதிருந்து ஒருவர் சாட்சி கூறினால் மட்டுமே அவர் முஸ்லிமாக இருக்க முடியும். இதில் ஒரு அடிப்படையை மட்டும் ஏற்று சாட்சி கூறினால் அவர் முஸ்லிமாக இருக்க முடியாது.

ஒருவர் லாஇலாஹா என்ற மறுப்பது எனும் அடிப்படையை மட்டுமே ஏற்றுக் கொள்கிறார். உறுதிப்படுத்த வேண்டிய அடிப்படையை ஏற்கவில்லை என்றால் அவர் நாத்திகவாதியாக ஆகிவிடுவார்.

ஒருவர் இல்லல்லாஹ் என்ற உறுதிப்படுத்த வேண்டிய அடிப்படையை மட்டுமே ஏற்றிருக்கிறார். மறுக்க வேண்டிய அடிப்படையை ஏற்க வில்லை என்றால் அவர் முஷ்ரிக்காக ஆகிவிடுவார்.

லாஇலாஹா இல்லல்லாஹ்வின் அடிப்படைகளான மறுப்பது மற்றும் உறுதிப்படுத்துவது ஆகிய இரண்டையும் ஏற்று ஒருவர் சாட்சி கூறினால் அவர் உண்மையான முஸ்லிமாக ஆகிவிடுவார்.

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவிலுள்ள மறுப்பது, உறுதிப்படுத்துவது ஆகிய இரண்டு அடிப்படைகளையும் எவ்வாறு நம்ப வேண்டும் என்பதைப் பற்றி முன்சென்ற நல்லோர்களின் நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட குறிப்புகளைக் கொண்டு இமாம் முஹம்மத் பின் அப்துல் வஹ்ஹாப் (رحمه الله) அவர்கள் கூறுகிறார்கள்,

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவில் மறுப்பது என்னும் அடிப்படை நான்கு வகைகளில் அமையும்.

1 - (نفي الآلهة) வணங்கப்படுகின்ற தெய்வங்கள் அனைத்தையும் மறுப்பது!

தெய்வங்களை குறிப்பதற்கு அரபியில் (إله) இலாஹ் என்பார்கள். ஒருவர் ஒரு பொருளை நன்மையை அளிக்கின்றதாகவும், தீமையை நீக்குகின்றதாகவும் நம்பினால், அவர் அதனை இலாஹ்வாக ஆக்கிவிட்டார் என்பது பொருள். ஆக தெய்வங்களை மறுப்பதென்பது இந்த பொருளில் தான் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 2 - (نفي الطاغوت) தாகூத்துகளை மறுப்பது!

ஒருவர் தான் வணங்குப்படுவதை அறிந்து அதனை பொருந்திக் கொண்டால் அவர் தாகூத் ஆவார். [1]

---

1. இமாம் முஹம்மத் பின் அப்துல் வஹ்ஹாப் (رحمه الله) அவர்கள் கூறுகிறார்கள், தாகூத்துகள் பலவகைகளில் உள்ளது. அவற்றில் தலையாயது ஐந்தாகும்.

1. அல்லாஹ்வைத் தவிர்த்து தன்னை வணங்குவதின் பக்கம் அழைக்கும் ஷைத்தான்.

   *ஆதமுடைய மக்களே! நீங்கள் ஷைத்தானை வணங்காதீர்கள். நிச்சயமாக அவன் உங்களுக்குப் பகிரங்கமான விரோதி என்று நான் உங்களிடம் உறுதி மொழி வாங்கவில்லையா? (அல்குர்ஆன் 36:60)*

2. அல்லாஹ்வின் ஷரியத் சட்டங்களை வேண்டுமென்று மாற்றும் கொடுங்கோல் ஆட்சியாளன்.

   *(நபியே) உம்மீது இறக்கப்பட்ட (இவ்வேதத்)தையும், உமக்கு முன்னர் இறக்கி வைக்கப்பட்டுள்ள (வேதங்கள் யா)வற்றையும் மெய்யாக்கவே தாங்கள் விசுவாசிப்பதாக எண்ணிக் கொண்டிருப்போர் பால் நீர் பார்க்கவில்லையா? அவர்கள் தாகூத்தை தீர்ப்புக் கூறுபவனாக ஆக்க நாடுகிறார்கள். ஆனால் அவர்களோ, அவனை நிராகரித்துவிட வேண்டுமெனத் திட்டமாகக் கட்டளையிடப்பட்டுள்ளார்கள். அந்த ஷைத்தானோ அவர்களை வெகு தூரமான வழி கேட்டில் வழிகெடுத்துவிடவே நாடுகின்றான். (அல்குர்ஆன் 4:60)*

3. அல்லாஹ் இறக்கியருளாத சட்டங்களின் அடிப்படையில் தீர்ப்பை வழங்குபவன்.

   *எவர் அல்லாஹ் இறக்கிவைத்ததைக் கொண்டு தீர்ப்பளிக்கவில்லையோ அத்தகையோர் தாம் நிராகாரிப்பாளர்களாவர். (அல்குர்ஆன் 5:44)*

4. மறைவான ஞானம் தனக்கு இருப்பதாக வாதிடுபவன்.

   *(என் இரட்சகனாகிய அவன்) மறைவானவற்றை அறிகிறவன். எனவேதான் மறைத்திருப்பவற்றை ஒருவருக்கும் அவன் வெளிப்படுத்த மாட்டான். தூதரில் தான் (தேர்வு செய்து) பொருந்திக் கொண்டவருக்கே தவிர (அல்குர்ஆன் 72:2627)*

5 - அல்லாஹ்வை தவிர்த்து தன்னை வணங்குபடுவதை பொருந்திக் கொள்பவன்.

   *இன்னும் அவர்களில் எவர் (அல்லாஹ்வாகிய) அவனையன்றி நிச்சயமாக நான்தான் (வணக்கத்திற்குரிய) நாயன் என்று கூறுகிறாரோ அவருக்கு நரகத்தையே நாம் கூலியாகக் கொடுப்போம். அநியாயக்காரர்களுக்கு இவ்வாறே நாம் கூலி கொடுப்போம். (அல்குர்ஆன் 21:29) (ஆதார நூல் : மஜ்மமுஅத்து ரஸாயில் ஃபீ தவ்ஹீத்)*

3 - (نفي الأنداد) சமமாக்குவதை மறுப்பது!

ஒரு மனிதனுக்கு தனது குடும்பத்தார்கள், உறவினர்கள், பொருளாதாரம் ஆகியவை மார்க்கத்தைவிட அதிக பிரியமுள்ளதாகவும், விருப்பமுள்ள தாகவும் இருந்தால் அவன் அதனை அல்லாஹ்விற்கு சமமாக்குகிறான் என்று பொருள்.

﴿وَمِنَ النَّاسِ مَنْ يَتَّخِذُ مِنْ دُونِ اللهِ أَنْدَادًا يُحِبُّونَهُمْ كَحُبِّ اللهِ﴾

மனிதர்களில் அல்லாஹ்வையன்றி அவனுக்கு இணையாளர்களை (சமமானவர்களாக) ஆக்கிக் கொண்டு அல்லாஹ்வை நேசிப்பது போன்று அவர்களை நேசிப்பவர்களும் இருக்கின்றனர். (2:165)

4 - (نفي الأرباب) அர்பாப் - தெய்வங்களை மறுப்பது

சத்தியத்திற்கு மாற்றமாக ஒருவர் உங்களிடம் தீர்ப்பளித்தும், நீங்கள் அவரை உண்மையாளர் என்று நம்பி அவருக்கு கீழ்படிவது அவரை (அர்பாப்) தெய்வமாக ஆக்கியதாகும்.

﴿اتَّخَذُوا أَحْبَارَهُمْ وَرُهْبَانَهُمْ أَرْبَابًا مِنْ دُونِ اللهِ وَالْمَسِيحَ ابْنَ مَرْيَمَ وَمَا أُمِرُوا إِلَّا لِيَعْبُدُوا إِلَهًا وَاحِدًا لَا إِلَهَ إِلَّا هُوَ سُبْحَانَهُ عَمَّا يُشْرِكُونَ﴾

(இவ்வாறே) அவர்கள் அல்லாஹ்வையன்றி தங்கள் பாதிரிகளையும், தங்கள் சந்நியாசிகளையும், மர்யமுடைய மகன் மஸீஹையும் தங்கள் தெய்வங்களாக எடுத்துக் கொண்டனர். இன்னும், ஒரே ஒரு இரட்ச கனையே வணங்கவேண்டும் என்றல்லாது (வேறு எதனையும்) அவர்கள் கட்டளையிடப்படவில்லை. அவனையன்றி வணக்கத்திற்குரியவன் (வேறெவரும்) இல்லை. அவர்கள் இணைவைப்பவற்றை விட்டும் அவன் மிகவும் பரிசுத்தமானவன். (அல்குர்ஆன் 9:31)

ஆக லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவில் மறுப்பது என்னும் அடிப்படை மேலே குறிப்பிட்டுள்ள வகையில் அமையும்!

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவில் உறுதிப்படுத்துவது என்னும் அடிப்படை நான்கு வகைகளில் அமையும்.

1 - (القصد) நோக்கம்

அல்லாஹ் ஒருவனை மட்டும் வணங்குவதையே நோக்கமாக கொண்டு வணக்கத்தை அல்லாஹ்விற்கு உறுதிப்படுத்த வேண்டும்.

2 - (المحبة) அன்பு வைத்தல்

கண்ணியத்தையும், அன்பையும் அல்லாஹ் ஒருவன் மீது மட்டுமே வைத்து உறுதிப்படுத்த வேண்டும்.

﴿وَالَّذِينَ آمَنُوا أَشَدُّ حُبًّا لِلَّهِ﴾

(ஆனால்) விசுவாசிகளோ அல்லாஹ்வை நேசிப்பதில் மிகக் கடினமானவர்கள். (அல்குர்ஆன் 2:165)

3 - 4 (الرجاء والخوف) ஆதரவு மற்றும் அச்சம் கொள்ளுதல்

அல்லாஹ்வின் மீது மட்டுமே ஆதரவையும், அச்சத்தையும் கொண்டு உறுதிப்படுத்த வேண்டும்.

﴿وَإِنْ يَمْسَسْكَ اللهُ بِضُرٍّ فَلَا كَاشِفَ لَهُ إِلَّا هُوَ وَإِنْ يُرِدْكَ بِخَيْرٍ فَلَا رَادَّ لِفَضْلِهِ يُصِيبُ بِهِ مَنْ يَشَاءُ مِنْ عِبَادِهِ وَهُوَ الْغَفُورُ الرَّحِيمُ ﴾

அல்லாஹ் உமக்கு ஒரு இடரை அடையச் செய்தால் அதனை நீக்குகிறவன் அவனைத் தவிர (வேறு) எவரும் இல்லை. மேலும் அவன் உமக்கு யாதொரு நன்மையை நாடினால் அவனது பேரருளை தடுப்பவர் எவருமில்லை. தன் அடியார்களில் அவன் நாடியவர்களுக்கு அதனை பெற்றுக் கொள்ளுமாறு செய்கின்றான். அவனோ மிக்க மன்னிப்போன், மிகக் கிருபையுடையோன். (அல்குர்ஆன் 10:107)

(مجموعة الرسائل والمسائل 4/ 99)

---------------

شروط لا إله إلا الله

## லாஇலாஹா இல்லல்லாஹ்வின் நிபந்தனைகள்

இமாம் ஹசன் அல்பஸரி (رحمه الله) அவர்களிடத்தில், லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறுபவர் சொர்க்கத்திற்கு சென்று விடுவார் என மக்கள் கூறுகிறார்களே அதன் நிலை என்ன? என கேட்கப்பட்டது. அதற்கவர்கள் எவரொருவர் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறி அதனுடைய உரிமைகளையும், கடமைகளையும் சரியாக நிறைவேற்று கிறாரோ அவரே சொர்க்கம் செல்வார் என்று பதிலளித்தார்கள். (ஜாமியுல் உலூம் வல்ஹிகம், பக்கம் - 209)

இமாம் வஹப் பின் முனப்பஹ் (رحمه الله) அவர்களிடம் ஒருவர் லாஇலாஹா இல்லல்லாஹ் சொர்க்கத்தின் திறவுகோல் இல்லையா? என்று கேட்டார். அதற்கு இமாம் வஹப் பின் முனப்பஹ் (رحمه الله) ஆமாம் லாஇலாஹா இல்லல்லாஹ் சொர்க்கத்தின் திறவுகோலாகும், எனினும் எந்த ஒரு திறவுகோலிற்கும் பற்கள் அவசியமாகும். நீங்கள் கொண்டு வரும் திறவுகோலில் பற்கள் இருந்தால் மட்டுமே அந்த திறவுகோல் திறக்கும். பற்கள் இல்லையெனில் அந்த திறவுகோல் திறக்காது.

அது போலவே லாஇலாஹா இல்லல்லாஹ்விற்கும் நிபந்தனைகள் இருக்கிறது அதனை கூறுபவர் அந்த நிபந்தனைகளுக்கு உட்பட்டு கூறினால் மட்டுமே அது பயனளிக்கும் என்றார்கள். (இமாம் புகாரி (رحمه الله) இதனை தனது ஸஹிஹுல் புகாரியில் ஜனாஸா பாடத்தில் முஅல்லகாக பதிவு செய்துள்ளார்கள்.)

அகீதா தொடர்பாக முன்சென்ற நல்லோர்கள் எழுதிய நூல்களில் லாஇலாஹா இல்லல்லாஹ்விற்கு ஏழு நிபந்தனைகள் இருப்பதை

அல்குர்ஆன் மற்றும் சுன்னாவின் ஆதாரங்களைக் கொண்டு கூறியுள்ளார்கள். அதனுடைய விபரங்களையே இங்கு இடம் பெற செய்திருக்கிறோம். இந்த ஏழு நிபந்தனைகளை ஒருவர் அறிந்து அதனடிப்படையில் லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கையில் உறுதியாக இருந்தால் மட்டுமே அவருடைய நம்பிக்கை அங்கீகரிக்கப் படும். இதில் ஒருவர் ஏதேனும் ஒரு நிபந்தனையை விட்டாலும் அவரின் லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற நம்பிக்கை அங்கீகரிக்கப்படாது. அந்த ஏழு நிபந்தனைகளைப் பற்றி இனி விரிவாக பார்ப்போம்!

1 - (العلم) அல்இல்மு - கல்வியறிவு

லாஇலாஹா இல்லல்லாஹ் என்று சாட்சி கூறுபவர் அக்கலிமாவைப் பற்றிய முறையான கல்வியை அறிந்திருப்பது மிக அவசியமாகும்.

அல்லாஹ் தனது அருள்மறையில் கூறுகிறான்,

﴿فَاعْلَمْ أَنَّهُ لَا إِلَهَ إِلَّا اللهُ وَاسْتَغْفِرْ لِذَنْبِكَ وَلِلْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ﴾

நிச்சயமாக அல்லாஹ்வைத் தவிர (உண்மையான) வணக்கத்திற்குரியவர் வேறு யாரும் இல்லை என்பதை நீர் அறிந்து கொள்வீராக! உம்முடைய பாவத்திற்காகவும், விசுவாசங்கொண்ட ஆண்களுக்காகவும், விசுவாசங் கொண்ட பெண்களுக்காகவும் பாவமன்னிப்பு கோருவீராக! (அல்குர்ஆன் 47:19)

இவ்வசனத்தில் அல்லாஹ் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று கூறுங்கள் என்பதற்கு பதிலாக அதனை அறிந்துக் கொள்ளுங்கள் என்கிறான். எனவே, லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவின் பொருளை விளங்கியிருப்பது அவசியமானதாக இருக்கிறது.

அல்லாஹ் கூறுகிறான்,

﴿مَنْ شَهِدَ بِالْحَقِّ وَهُمْ يَعْلَمُونَ﴾

அவர்கள் அறிந்தோராக இருக்க சத்தியத்தைக் கொண்டு சாட்சியம் கூறினார்கள். (அல்குர்ஆன் 43:86)

இவ்வசனத்தில் சத்தியம் என்பது லாஇலாஹா இல்லல்லாஹ்வை குறிக்கிறது என அல்குர்ஆன் விரிவுரையாளர்கள் கூறுகிறார்கள். ஆக லாஇலாஹா இல்லல்லாஹ்வை சாட்சி கூறுவதாக இருந்தால் அதனை அறிந்திருந்தே சாட்சி கூற வேண்டும்.

عَنْ عُثْمَانَ قَالَ قَالَ رَسُولُ الله صلى الله عليه وسلم مَنْ مَاتَ وَهُوَ يَعْلَمُ أَنَّهُ لاَ إِلَهَ إِلاَّ اللهُ دَخَلَ الْجَنَّةَ » مسلم.

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள், எவர் மரணிக்கும் போது லாஇலாஹா இல்லல்லாஹ்வை அறிந்தவராக மரணிக்கிறாரோ அவர் சொர்க்கத்தில் நுழைவார். (அறிவிப்பாளர்: உஸ்மான் பின் அப்ஃஃபான் நூல்: முஸ்லிம்)

லாஇலாஹா இல்லல்லாஹ் என்று சாட்சி கூறுபவர் சாட்சி கூறுவதற்கு முன்பு கலிமாவின் பொருளை அறிய வேண்டும். கலிமாவின் பொருளை அறியாமல் ஒருவர் சாட்சி கூறினால் அவர் இணைவைப்பு என்ற பெரும் பாவத்தில் விழுந்து விடுவார்.

ஆகவேதான் கலிமாவைப் பற்றி அறிவது மிகவும் அவசியம் வாய்ந்த கல்வியாக இருக்கிறது. ஸஹாபாக்கள் கலிமாவின் பொருளை அறிந்து இருந்ததினால் தான் அவர்கள் அல்லாஹ்விற்கு ஒருபோதும் இணைவைக்காமல் தங்களின் கொள்கையில் உறுதியாக இருந்தார்கள். மேலும் மக்கத்து காஃபிர்கள்கூட லாஇலாஹா இல்லல்லாஹ்வின் பொருளை அறிந்ததினாலேயே அக்கலிமாவை கூற மறுத்து தங்களின் இணைவைப்பு கொள்கையில் உறுதியாக இருந்தார்கள்.

﴿أَجَعَلَ الْآلِهَةَ إِلَٰهًا وَاحِدًا إِنَّ هَٰذَا لَشَيْءٌ عُجَابٌ﴾

(என்ன) இவர் (நம்முடைய வணக்கதிற்குரிய) தெய்வங்களை (நிராகரித்து விட்டு) ஒரே வணக்கத்திற்குரியவனாக ஆக்கி விட்டாரா? நிச்சயமாக இது ஓர் ஆச்சரியமான விஷயம்தான் (என்றும் கூறினர்) (அல்குர்ஆன் 38:5)

லாஇலாஹா இல்லல்லாஹ்வின் அடிப்படைகளான மறுப்பது, உறுதிப் படுத்துவது தொடர்பான கல்வியை அறிந்திருப்பதும் அவசியமாகும்.

2 - (اليقين) உள்ளத்தால் உறுதிப்படுத்துதல்.

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை சாட்சி கூறுபவர், அதனை உள்ளத்தால் உறுதிப்படுத்தி சாட்சி கூற வேண்டும். அதில் அவருக்கு எவ்விதமான சந்தேகமோ, தடுமாற்றமோ இருக்கக் கூடாது.

அல்லாஹ் கூறுகிறான்.

﴿إِنَّمَا الْمُؤْمِنُونَ الَّذِينَ آمَنُوا بِاللَّهِ وَرَسُولِهِ ثُمَّ لَمْ يَرْتَابُوا﴾

(உண்மையான) விசுவாசிகள் எத்தகையோரென்றால், அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் விசுவாசங்கொண்டு பின்னர் எவ்வித சந்தேகமும் கொள்ளாது இருப்பார்கள். (அல்குர்ஆன் 49:15)

இவ்வசனத்தில் அல்லாஹ் தன் மீது ஈமான் கொள்பவர்கள் உறுதியான முறையில் ஈமான் கொள்வார்கள். அதில் அவர்களுக்கு எவ்வித சந்தேகமும் இருக்காது என்கிறான். லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற நம்பிக்கை அல்லாஹ்வின் மீது ஈமான் கொள்வதில் மிக முக்கியமான அம்சமாக இருக்கிறது. எனவே, கலிமாவை சாட்சி கூறுபவர் அதனை உள்ளத்தால் உறுதிப்படுத்தி கூறவேண்டும். அதில் அவருக்கு எவ்விதமான சந்தேகமும் இருக்க கூடாது.

أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَأَنِّى رَسُولُ اللهِ لاَ يَلْقَى اللهَ بِهِمَا عَبْدٌ غَيْرَ شَاكٍّ فِيهِمَا إِلاَّ دَخَلَ الْجَنَّةَ

“உண்மையான வணக்கத்திற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும், நான் அல்லாஹ்வின் தூதராக இருக்கிறேன் என்றும் நான் உறுதி கூறுகிறேன். இவ்விரு உறுதி மொழிகளுடன், அவற்றில் சந்தேகம் கொள்ளாமல் அல்லாஹ்வைச் சந்திக்கும் அடியார் எவரும் சொர்க்கம் செல்லாமல் இருக்கமாட்டார்” என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.) (நூல்: முஸ்லிம் - 44)

عَنْ ابي هريرة رضي الله عنه قال قَالَ رَسُولُ الله صلى الله عليه وسلم فَمَنْ لَقِيتَ مِنْ وَرَاءِ هَذَا الْحَائِطِ يَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللهُ مُسْتَيْقِنًا بِهَا قَلْبُهُ فَبَشِّرْهُ بِالْجَنَّةِ

“உண்மையான வணக்கத்திற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று யார் தமது உள்ளத்தால் உறுதியாக நம்பி, சான்று கூறுகின்றாரோ அவரைத் தோட்டத்திற்கு அப்பால் நீ சந்தித்தால் அவருக்குச் சொர்க்கம் கிடைக்கும் என்று நற்செய்தி சொல்!” என்று அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பாளர்: அபூஹுரைரா رضي الله عنه நூல்: முஸ்லிம் - 52)

இந்த ஹதீஸ்களில் இருந்து ஒருவர் உள்ளத்தால் உறுதியாக நம்பாமல் சாட்சி கூறினால், அவர் சொர்க்கம் செல்ல மாட்டார் என்பதை அறியலாம்.

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவிற்கு சாட்சியளிப்பவர் அதில் சந்தேகம் கொண்டால் அவரின் சாட்சி ஏற்கப்படாது. மேலும் இஸ்லாத்தின் பார்வையில் அவர் நயவஞ்சகர் ஆவார்.

﴿إِنَّمَا يَسْتَأْذِنُكَ الَّذِينَ لَا يُؤْمِنُونَ بِاللهِ وَالْيَوْمِ الْآخِرِ وَارْتَابَتْ قُلُوبُهُمْ فَهُمْ فِي رَيْبِهِمْ يَتَرَدَّدُونَ﴾

(போருக்கு செல்லாமலிருக்க) உம்மிடம் அனுமதி கேட்பதெல்லாம் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் விசுவாசங் கொள்ளாதவர்கள்தாம். இன்னும் அவர்களுடைய இதயங்கள் சந்தேகத்தில் ஆழ்ந்துவிட்டன. ஆகவே அவர்கள் தங்கள் சந்தேகத்திலேயே தடுமாறிக் கொண்டிருக் கின்றனர். (அல்குர்ஆன் 9:45)

முனாஃபிக்குகள் அல்லாஹ்வையும், மறுமையையும் நம்புவதாக வெளிப்படையாக கூறுகின்றனர். ஆனால் அவர்களின் உள்ளமோ அதில் சந்தேகத்தில் இருக்கிறது. ஆகவேதான் அல்லாஹ் அவர்களை விசுவாசிகள் இல்லை என கூறுகிறான்.

லாஇலாஹா இல்லல்லாஹ் என்று சாட்சியளிப்பவர் அல்லாஹ்வைத் தவிர்த்து வணங்கப்படக்கூடிய தெய்வங்கள் அனைத்தும் போலியானவை

என்பதில் உறுதியாக நம்பிக்கை கொள்ள வேண்டும். அல்லாஹ்வைத் தான் வணங்க வேண்டும் என்பதில் ஒருவர் உறுதியான நம்பிக்கையுடன் இருப்பதாக கூறுகிறார்.

அல்லாஹ்வைத் தவிர்த்து வணங்கப்படக்கூடிய போலியான தெய்வங்கள் தொடர்பான நம்பிக்கையில் சந்தேகத்தில் இருக்கிறார் எனில் அவரின் சாட்சியமும் ஏற்கப்படாது. எனவே, லாஇலாஹா இல்லல்லாஹ் என்று சாட்சியளிப்பவர் எவ்விதமான சந்தேகமும் இல்லாமல் உறுதியான நம்பிக்கையுடன் சாட்சியளிப்பது மிகவும் அவசியமாகும்.

3 - (القبول) - நாவாலும், மனதாலும் ஏற்பது

லாஇலாஹா இல்லல்லாஹ் என்று சாட்சி கூறுபவர், அதனை நாவாலும் மனதாலும் முழுமையாக ஏற்று சாட்சி கூற வேண்டும்.

﴿إِنَّهُمْ كَانُوا إِذَا قِيلَ لَهُمْ لَا إِلَٰهَ إِلَّا اللَّهُ يَسْتَكْبِرُونَ وَيَقُولُونَ أَئِنَّا لَتَارِكُو آلِهَتِنَا لِشَاعِرٍ مَّجْنُونٍ﴾

அல்லாஹ்வைத் தவிர வேறொரு (வணக்கத்திற்குரிய) நாயன் இல்லை! என்று அவர்களுக்கு கூறப்பட்டால் நிச்சயமாக அவர்கள் பெருமையடிப்ப வர்களாக இருந்தனர். நாங்கள் பைத்தியக்காரரான ஒரு கவிஞருக்காக எங்களுடைய வணக்கத்திற்குரியவர்களான தெய்வங்களை நிச்சயமாக விட்டு விடுகின்றவர்களா? என்றும் அவர்கள் கூறுபவர்களாக இருந்தனர். (அல்குர்ஆன் 37:35-36)

மக்கத்து காஃபிர்கள் லாஇலாஹா இல்லல்லாஹ்வின் பொருளை அறிந்திருந்தார்கள். மேலும் அதில் அவர்களுக்கு உறுதியான நம்பிக்கையும் இருந்தது. ஆனால் அதனை அவர்கள் நாவாலும் மனதாலும் ஏற்பதற்கு முன்வரவில்லை. அவர்களிடமிருந்த ஆணவமும், தற்பெருமையும் லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை ஏற்க விடாமல் அவர்களை தடுத்துவிட்டது.

மக்கத்து காஃபிர்களைப் போன்று யூதர்களும் நபி ﷺ அவர்களின் தூதுத்துவத்தை அறிந்திருந்தும் அதனை ஏற்காமல் இருந்தார்கள்.

﴿الَّذِينَ آتَيْنَاهُمُ الْكِتَابَ يَعْرِفُونَهُ كَمَا يَعْرِفُونَ أَبْنَاءَهُمْ وَإِنَّ فَرِيقًا مِنْهُمْ لَيَكْتُمُونَ الْحَقَّ وَهُمْ يَعْلَمُونَ﴾

நாம் எவர்களுக்கு வேதத்தை கொடுத்திருக்கின்றோமோ அத்தகையோர் தங்கள் மக்களை(ச் சந்தேகமற)அறிவதைப்போல் அவரை (முஹம்மது) அறிவார்கள். இன்னும் அவர்களிலொரு பிரிவினர் நிச்சயமாக நன்கறிந்து கொண்டே (இந்த) உண்மையை மறைக்கின்றனர். (அல்குர்ஆன் 2:146)

வேதம் கொடுக்கப்பட்ட யூதர்களும், கிறிஸ்துவர்களும் தங்களின் குழந்தைகளை அறிவதைப்போல் நபி ﷺ அவர்களை இறுதி நபி என்பதை நன்கு அறிந்திருந்தும், அதற்கான அடையாளங்களை கண்டு அவர்களுக்கு உறுதியிருந்தும் நபி ﷺ அவர்களை ஏற்க மறுத்து விட்டார்கள்.

عَنْ أَبِى مُوسَى عَنِ النَّبِىِّ صلى الله عليه وسلم قَالَ مَثَلُ مَا بَعَثَنِى اللهُ بِهِ مِنَ الْهُدَى وَالْعِلْمِ كَمَثَلِ الْغَيْثِ الْكَثِيرِ أَصَابَ أَرْضًا ، فَكَانَ مِنْهَا نَقِيَّةٌ قَبِلَتِ الْمَاءَ ، فَأَنْبَتَتِ الْكَلأَ وَالْعُشْبَ الْكَثِيرَ، وَكَانَتْ مِنْهَا أَجَادِبُ أَمْسَكَتِ الْمَاءَ ، فَنَفَعَ اللهُ بِهَا النَّاسَ ، فَشَرِبُوا وَسَقَوْا وَزَرَعُوا ، وَأَصَابَتْ مِنْهَا طَائِفَةً أُخْرَى، إِنَّمَا هِىَ قِيعَانٌ لاَ تُمْسِكُ مَاءً ، وَلاَ تُنْبِتُ كَلأً ، فَذَلِكَ مَثَلُ مَنْ فَقِهَ فِى دِينِ اللهِ وَنَفَعَهُ مَا بَعَثَنِى اللهُ بِهِ ، فَعَلِمَ وَعَلَّمَ ، وَمَثَلُ مَنْ لَمْ يَرْفَعْ بِذَلِكَ رَأْسًا ، وَلَمْ يَقْبَلْ هُدَى اللهِ الَّذِى أُرْسِلْتُ بِهِ »

நபி ﷺ அவர்கள் கூறினார்கள், ‘அல்லாஹ் என்னை நேர்வழி மற்றும் ஞானத்துடன் அனுப்பியதற்கு உவமையாவது, நிலத்தில் விழுந்த பெருமழை போன்றதாகும். அவற்றில் சில நிலங்கள் நீரை ஏற்று ஏராளமான புற்களையும் செடி, கொடிகளையும் முளைக்கச் செய்தன.

வேறு சில தண்ணீரைத் தேக்கி வைத்துக் கொள்ளும் தரிசு நிலங்களாகும். அதனை அல்லாஹ் மக்களுக்குப் பயன்படச் செய்தான். அதனை மக்கள் அருந்தினர்; (தம் கால்நடைகளுக்கும்) புகட்டினர்; விவசாயமும் செய்தனர். அந்தப் பெருமழை இன்னொரு வகை நிலத்திலும் விழுந்தது. அது (ஒன்றுக்கும் உதவாத) வெறும் கட்டாந்தரை. அது தண்ணீரைத் தேக்கி வைத்துக் கொள்ளவும் இல்லை; புற்பூண்டுகளை முளைக்க விடவுமில்லை. இதுதான் அல்லாஹ்வின் மார்க்கத்தில் விளக்கம் பெற்று நான் கொண்டு வந்த தூதினால் பயனடைந்து, கற்றுத் தெரிந்து பிறருக்கும் கற்றுக் கொடுத்தவருக்கும் நான் கொண்டு வந்த தூதை ஏறிட்டுப் பாராமலும் நான் கொண்டு வந்த அல்லாஹ்வின் நேர்வழியை ஏற்றுக் கொள்ளாமலும் வாழ்கிறவனுக்கும் உவமையாகும்' (அறிவிப்பாளர்: அபூ மூஸா அல்அஷ்அரி ﷺ நூல்: புகாரி -79)

இந்த ஹதீஸின் மூலம் மழையானது கட்டாந்தரையான பூமியில் விழுந்தால் அதனை அப்பூமியானது அம்மழையை ஏற்காமல் விட்டு விடுவதைப் போல் லாஇலாஹா இல்லல்லாஹ் கூறுபவர் அதனை நாவாலும் மனதாலும் ஏற்காமல் விட்டால் அவருக்கு அது எவ்வித பயனையும் அளிக்காது.

ஆக நம்பிக்கை சார்ந்த விஷயங்களில் அது பற்றிய கல்வியறிவு மற்றும் உறுதி என்ற இரு நிபந்தனைகளுடன் மூன்றாவதாக அதனை நாவாலும், உள்ளத்தாலும் ஏற்கவும் வேண்டும். அதனை ஏற்க மறுப்பவரின் நம்பிக்கை அங்கீகரிக்கப்படாது.

லாஇலாஹா இல்லல்லாஹ்வை ஏற்பதால் மார்க்கத்தில் மற்ற என்னென்ன நம்பிக்கை சார்ந்த விஷயங்களையும், சட்டங்களையும் ஏற்பது அவசியமாகுமோ, அவை அனைத்தையும் கட்டாயமாக ஏற்க வேண்டும். உதாரணத்திற்கு நபி ﷺ அவர்கள் கூறிய ஆதாரப்பூர்வமான ஹதீஸ்கள் பகுத்தறிவுக்கு முரண்பட்டாலும் அந்த ஹதீஸ்களை நிராகரிக்காமல் ஏற்கவேண்டும். இஸ்லாமிய குற்றவியல் சட்டங்களை விமர்ச்சிக்காமல் அதனை உண்மையென ஏற்கவேண்டும். இத்தகைய சட்டங்களை ஒருவர் விமர்ச்சித்தால் அவர் கலிமாவை ஏற்க மறுத்தவர் என்ற நிலையில் இடம் பெறுவார்.

4 - (الإنقياد) கீழ்ப்படிதல்[1]

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவிற்கு சாட்சியளிப்பவர் அல்லாஹ் விதித்த கட்டளைகளில் எதனையும் விடாமல் அதற்கு முற்றிலுமாக கீழ்ப்படிவது அவசியமாகும்.

அல்லாஹ் கூறுகிறான்,

﴿وَمَنْ يُسْلِمْ وَجْهَهُ إِلَى اللهِ وَهُوَ مُحْسِنٌ فَقَدِ اسْتَمْسَكَ بِالْعُرْوَةِ الْوُثْقَى﴾

எவர் நன்மை செய்கிறவராயிருக்கும் நிலையில் (தனது காரியத்தை முழுமையாக ஒப்படைத்து) அல்லாஹ்வின் பால் தன் முகத்தை திருப்புகிறாரோ அவர், நிச்சயமாக மிக மிக பலமானதொரு கயிற்றைப் பற்றிப் பிடித்துக் கொண்டார். (அல்குர்ஆன் 31:22)

- இவ்வசனத்தில் நன்மை செய்கின்ற நிலையில் இருப்பவர் என்பது அல்லாஹ் கட்டளையிட்டதை செய்தும், அவன் தடுத்ததை விட்டு விலகியும் இருப்பவரை குறிக்கிறது. ஆக மார்க்க சட்டங்களுக்கு முழுமையாக கீழ்ப்படிந்து நடப்பவர் தன் முகத்தை அல்லாஹ்வின் பால் திருப்பியவர் ஆவார்.
- பலமான கயிறு என்பது லாஇலாஹா இல்லல்லாஹ்வை குறிக்கிறது என இப்னு அப்பாஸ் அவர்கள் கூறுகிறார்கள். (பார்க்க - தஃப்ஸிர் அத்தபரி)

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கயிறை பலமாக பற்றி பிடித்தவர் மார்க்க சட்டங்களுக்கு முற்றிலுமாக கீழ்ப்படிந்து நடப்பதிலும் சரியாக இருப்பார்.

﴿فَلَا وَرَبِّكَ لَا يُؤْمِنُونَ حَتَّى يُحَكِّمُوكَ فِيمَا شَجَرَ بَيْنَهُمْ ثُمَّ لَا يَجِدُوا فِي أَنْفُسِهِمْ حَرَجًا مِمَّا قَضَيْتَ وَيُسَلِّمُوا تَسْلِيمًا﴾

1 - ஏற்பது - கீழ்ப்படிவது ஆகியவற்றிக்கு மத்தியிலுள்ள வித்தியாசம். ஏற்பது என்பது சொல்லிலும் கீழ்ப்படிதல் என்பது செயலிலும் இருக்கும்.

உமது இரட்சகன் மீது சத்தியமாக! அவர்கள் தங்களுக்குள் ஏற்பட்ட சச்சரவில் உம்மை நீதிபதியாக ஆக்கி, நீர் செய்யும் தீர்ப்பைத் தங்கள் மனங்களில் எத்தகைய அதிருப்தியையும் பெறாமல் முற்றிலும் ஏற்றுக் கொள்ளாத வரையில் அவர்கள் விசுவாசிகளாக மாட்டார்கள். (அல்குர்ஆன் 4:65)

உண்மையான விசுவாசிகள் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் கட்டளைக்கு கீழ்ப்படிந்து நடப்பார்கள்.

5 - (الصدق) அஸ்ஸித்க் - உள்ளத்தால் உண்மைப்படுத்துதல்

கலிமாவை நாவினால் மொழிவதுடன், உள்ளத்தால் அதனை உண்மைப் படுத்துவதும் அவசியமாகும். உள்ளத்தால் உண்மைப்படுத்துபவரே உண்மையான இறைநம்பிக்கையாளர் ஆவார். ஒருவர் கலிமாவை நாவினால் மொழிந்து உள்ளத்தால் உண்மைப்படுத்தவில்லை எனில் அவர் முனாஃபிக் ஆவார்.

அல்லாஹ் கூறுகிறான்,

﴿إِذَا جَاءَكَ الْـمُنَافِقُونَ قَالُوا نَشْهَدُ إِنَّكَ لَرَسُولُ اللهِ وَاللهُ يَعْلَمُ إِنَّكَ لَرَسُولُهُ وَاللهُ يَشْهَدُ إِنَّ الْـمُنَافِقِينَ لَكَاذِبُونَ﴾

நபியே! முனாஃபிக்குகள் உம்மிடம் வந்தால் நிச்சயமாக நீர் அல்லாஹ்வுடைய தூதர்தான் என்று நாங்கள் சாட்சி கூறுகிறோம் என்பதாகக் கூறுகின்றனர். இன்னும் நிச்சயமாக நீர் அவனுடைய தூதர்தான் என்பதை அல்லாஹ் நன்கறிவான். இன்னும் நிச்சயமாக இந்த முனாஃபிக்குகள் பொய்யர்களாவர் என்று அல்லாஹ் சாட்சி கூறுகிறான். (அல்குர்ஆன் 63:1)

நபி ﷺ அவர்களின் காலத்தில் வாழ்ந்த முனாஃபிக்குகள் நபி ﷺ அவர்களை அல்லாஹ்வின் தூதராக ஏற்பதாக நாவினால் சாட்சி அளித்தார்கள். ஆனால் அவர்கள் தங்களின் உள்ளத்தில் இச்சாட்சியை உண்மைப்படுத்தாமல் பொய்ப்பித்து கொண்டிருந்தார்கள். ஆகவேதான் அல்லாஹ் முனாஃபிக்குகளின் சாட்சியத்தை ஏற்காமல், அவர்களை பொய்யர்கள் என்கிறான்.

﴿وَمِنَ النَّاسِ مَنْ يَقُولُ آمَنَّا بِاللهِ وَبِالْيَوْمِ الْآخِرِ وَمَا هُمْ بِمُؤْمِنِينَ﴾

இன்னும் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் விசுவாசம் கொண்டிருக்கிறோம் எனக் கூறுவோர் மனிதர்களில் (சிலர்) இருக்கின்றனர். அவர்களோ விசுவாசங்கொண்டவர்களல்லர். (அல்குர்ஆன் 2:8)

இவ்வசனத்தில் அல்லாஹ் முனாபிக்குகளைப் பற்றி கூறும்போது அவர்கள் அல்லாஹ்வின் மீதும், மறுமையின் மீதும் ஈமான் கொண்டதாக கூறுகின்றனர். ஆனால் உண்மையில் அவர்கள் ஈமான் கொண்டவர்களாக ஆக மாட்டார்கள். ஏனெனில் அவர்கள் தங்களின் கூற்றில் உண்மையாளர்கள் இல்லை. வெளிப்படையாக நாவினால் கூறிவிட்டாலும், உள்ளத்தால் அதனை அவர்கள் உண்மைப்படுத்தாமல் இருப்பதே இதற்கான காரணம் என அல்லாஹ் தெரிவிக்கிறான்.

மேலும் அல்லாஹ் இத்தகைய முனாஃபிக்குகளை நரகத்தில் நுழைய செய்து அதன் அடித்தட்டில் இடம் பெற செய்வான்.

﴿إِنَّ الْمُنَافِقِينَ فِي الدَّرْكِ الْأَسْفَلِ مِنَ النَّارِ وَلَنْ تَجِدَ لَهُمْ نَصِيرًا﴾

நிச்சயமாக முனாஃபிக்குகள் நரகத்தின் மிகவும் கீழான அடித்தளத்தில் இருப்பார்கள். இன்னும் (அங்கு) அவர்களுக்கு உதவியாளரை நீர் காணவே மாட்டீர். (அல்குர்ஆன் 4:145)

عَنْ قَتَادَةَ قَالَ حَدَّثَنَا أَنَسُ بْنُ مَالِكٍ أَنَّ النَّبِيَّ صلى الله عليه وسلم وَمُعَاذٌ رَدِيفُهُ عَلَى الرَّحْلِ قَالَ يَا مُعَاذُ بْنَ جَبَلٍ قَالَ لَبَّيْكَ يَا رَسُولَ اللهِ وَسَعْدَيْكَ. قَالَ يَا مُعَاذُ قَالَ لَبَّيْكَ يَا رَسُولَ اللهِ وَسَعْدَيْكَ . ثَلاَثًا قَالَ مَا مِنْ أَحَدٍ يَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللهِ صِدْقًا مِنْ قَلْبِهِ إِلاَّ حَرَّمَهُ اللهُ عَلَى النَّارِ

(البخاري – 128)

அனஸ் பின் மாலிக் رضي الله عنه அவர்கள் கூறியதாவது, ஒரே வாகனத்தின் மீது

முஆத் ﷺ அவர்கள் நபி ﷺ அவர்களுக்குப் பின்னே அமர்ந்திருந்த நிலையில், நபி ﷺ அவர்கள் முஆதே! என்று அழைத்தார்கள். உத்திரவிற்கு காத்திருக்கிறேன் அல்லாஹ்வின் தூதரே! தங்களின் உத்தரவிற்கு பணிவதை பெரும் பேறாகவும் கருதுகிறேன் என்று முஆத் ﷺ அவர்கள் கூறினார்கள். முஆதே! என மீண்டும் நபி ﷺ அவர்கள் அழைத்தார்கள். உத்தரவிற்கு காத்திருக்கிறேன் அல்லாஹ்வின் தூதரே! தங்களின் உத்தரவிற்கு பணிவதை பெரும் பேறாகவும் கருதுகிறேன் என மீண்டும் முஆத் ﷺ அவர்கள் கூறினார்கள். இவ்வாறு மூன்று முறை கூறப்பட்டது. பிறகு தன் உள்ளத்திலிருந்து உண்மையான எண்ணத்துடன் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும் முஹம்மது அல்லாஹ்வின் தூதராவார்கள் என்றும் எவரொருவர் உறுதியாக சாட்சியளிக்கிறாரோ அவர் மீது அல்லாஹ் நரகத்தை ஹராமாக்கி விடுகிறான் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பாளர்: கதாதா ﷺ நூல்: புகாரி - 128)

உள்ளத்திலிருந்து கலிமாவை உண்மைப்படுத்தி கூறுபவரின் நம்பிக்கையே அங்கீகரிக்கப்படும். அத்தகையவர் மீது மட்டுமே அல்லாஹ் நரகத்தை ஹராமாக்குகிறான். எனவே, கலிமாவிற்கு சாட்சியளிப்பவர் உள்ளத்தால் உண்மைப்படுத்தி சாட்சியளிப்பது மிகவும் அவசியமான நிபந்தனையாக இருக்கிறது.

6) - الإخلاص அல்இக்லாஸ் - தூய எண்ணம்

இணைவைத்தலின் அனைத்து வகைகளை விட்டும் விலகி வணக்கங்களை தூய எண்ணத்துடன் அல்லாஹ்விற்காக மட்டுமே செய்வதின் பெயரே இக்லாஸ் ஆகும். இக்லாஸ் என்பது இணைவைப்பு, முகஸ்துதி மற்றும் தற்புகழ்ச்சி ஆகியவற்றிக்கு எதிர் பதமாகும்.

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை மொழிபவர் இக்லாஸான எண்ணத்துடன் கலிமாவிற்கு சாட்சியளிக்க வேண்டும். ஒருவர் உலக ஆதாயங்களான பொருளாதாரம், புகழ்ச்சி திருமணம் போன்ற நோக்கங்களுக்காக கலிமாவிற்கு சாட்சியளிக்கிறார் எனில் அவரின் சாட்சியம் அவருக்கு எவ்வித பயனையும் அளிக்காது. மேலும் அவர் இஸ்லாத்தின் பார்வையில் இரட்டை வேடம் போடும் முனாஃபிக்காக தான் கணக்கிடப்படுவார்.

அல்குர்ஆனிலும், சுன்னாவிலும் இக்லாஸ் என்ற தூய எண்ணத்தை வலியுறுத்தி பல தகவல்களை காணலாம்.

﴿وَمَا أُمِرُوا إِلَّا لِيَعْبُدُوا اللهَ مُخْلِصِينَ لَهُ الدِّينَ حُنَفَاءَ﴾

இன்னும் அல்லாஹ்வை அவனுக்காகவே வணக்கத்தைக் கலப்பற்றதாக ஆக்கியவர்களாகவே தவிர அவர்கள் கட்டளையிடப்படவில்லை. (அல்குர்ஆன் 98:5)

عَنْ أَبِى هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللهِ –صلى الله عليه وسلم– ﴿قَالَ اللهُ تَبَارَكَ وَتَعَالَى أَنَا أَغْنَى الشُّرَكَاءِ عَنِ الشِّرْكِ مَنْ عَمِلَ عَمَلاً أَشْرَكَ فِيهِ مَعِى غَيْرِى تَرَكْتُهُ وَشِرْكَهُ﴾

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள், வளமும், உயர்வும் மிக்க அல்லாஹ் கூறுகிறான், நான் இணைவைத்தலை விட்டும், இணையாளர்களை விட்டும் தேவையற்றவன். எவரேனும் ஒரு நற்செயல் புரிந்து அதில் என்னுடன் மற்றவர்களை இணையாக்கினால் அவரையும், அவரது இணைவைத்தலையும் நான் விட்டுவிடுவேன். (அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: முஸ்லிம் - 5708)

عَنْ أَبِى هُرَيْرَةَ أَنَّهُ قَالَ قِيلَ يَا رَسُولَ اللهِ ، مَنْ أَسْعَدُ النَّاسِ بِشَفَاعَتِكَ يَوْمَ الْقِيَامَةِ قَالَ رَسُولُ اللهِ صلى الله عليه وسلم لَقَدْ ظَنَنْتُ يَا أَبَا هُرَيْرَةَ أَنْ لاَ يَسْأَلَنِى عَنْ هَذَا الْحَدِيثِ أَحَدٌ أَوَّلُ مِنْكَ ، لِمَا رَأَيْتُ مِنْ حِرْصِكَ عَلَى الْحَدِيثِ ، أَسْعَدُ النَّاسِ بِشَفَاعَتِى يَوْمَ الْقِيَامَةِ مَنْ قَالَ لاَ إِلَهَ إِلاَّ اللهُ ، خَالِصًا مِنْ قَلْبِهِ أَوْ نَفْسِهِ » (البخاري – 99. 6570)

அல்லாஹ்வின் தூதரே! மறுமை நாளில் தங்களின் பரிந்துரைக்கு

மனிதர்களிலேயே மிக நற்பாக்கியம் பெற்றவர் யார்? என நபி ﷺ அவர்களிடம் கேட்டேன். அப்போது அபூஹுரைராவே எனது ஹதீஸ்களின் மீது உமக்கு இருக்கும் பேராவலை நான் அறிந்திருக்கிறேன். ஆகவே தான் இதனை உமக்கு முன்பு வேறு யாரும் கேட்க மாட்டார்கள் என நான் எண்ணியிருந்தேன். (எனது எண்ணம் சரியாகவே இருந்திருக்கிறது) பிறகு நபி ﷺ அவர்கள் கூறினார்கள், மறுமை நாளில் எனது பரிந்துரைக்கு மனிதர்களிலேயே மிகவும் நற்பாக்கியம் பெற்றவர் யாரெனில் யார் தனது உள்ளத்திலிருந்து அல்லது மனதிலிருந்து கலப்பற்ற முறையில் தூய எண்ணத்துடன் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறினாரோ அவர்தான் என்றார்கள். (அறிவிப்பாளர்: அபூஹுரைரா رضي الله عنه நூல்: புகாரி - 99)

قَالَ رَسُولُ الله صلى الله عليه وسلم فَإِنَّ اللهَ قَدْ حَرَّمَ عَلَى النَّارِ مَنْ قَالَ لاَ إِلَهَ إِلاَّ اللهُ يَبْتَغِى بِذَلِكَ وَجْهَ اللهِ » (البخاري – 524)

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள், அல்லாஹ்வின் முகத்தை நாடி எவர் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறினாரோ அவர் மீது அல்லாஹ் நரகத்தை ஹராமாக்கி விட்டான். (புகாரி - 425)

இந்த ஹதீஸ்களின் மூலம் இக்லாஸான எண்ணத்துடன் கலிமாவை கூறுபவர் மீது மட்டுமே அல்லாஹ் நரகத்தை ஹராமாக்குகிறான் என்பதை அறியலாம். எனவே, கலிமாவை மொழிபவர் தூய எண்ணத்துடன் மொழிவது மிகவும் அவசியமான நிபந்தனையாக இருக்கிறது.

7. - المحبة அல்முஹப்பத் - நேசித்தல்

லாஇலாஹா இல்லல்லாஹ் என்று சாட்சி கூறுபவர் கலிமாவை நேசிக்க வேண்டும். மார்க்கத்தில் எதனையெல்லாம் நேசிக்க வேண்டும் என கலிமா கூறுகிறதோ, அவை அனைத்தையும் நேசிக்க வேண்டும். அத்துடன் இக்கலிமாவை தங்கள் உள்ளங்களில் சுமந்திருக்கும் இறைநம்பிக்கையாளர்களையும் நேசிக்க வேண்டும். அவ்வாறே கலிமாவிற்கு எதிரான தவறான நம்பிக்கைகளான ஷிர்க், குஃப்ர் நயவஞ் சகத்தனம் போன்றவற்றை வெறுக்க வேண்டும்.

﴿وَمِنَ النَّاسِ مَنْ يَتَّخِذُ مِنْ دُونِ اللهِ أَنْدَادًا يُحِبُّونَهُمْ كَحُبِّ اللهِ وَالَّذِينَ آمَنُوا أَشَدُّ حُبًّا لِلهِ﴾

மனிதர்களில் அல்லாஹ்வையன்றி அவனுக்கு இணையாளர்களை (சமமானவர்களாக) ஆக்கிக் கொண்டு அல்லாஹ்வை நேசிப்பது போன்று அவர்களை நேசிப்பவர்களும் இருக்கின்றனர். (ஆனால்) விசுவாசிகளோ அல்லாஹ்வை நேசிப்பதில் மிகக் கடினமானவர்கள். (அல்குர்ஆன் 2:165)

இமாம் இப்னுல் கய்யிம் (رحمه الله) அவர்கள் கூறுகிறார்கள், அல்லாஹ்விற்கு இணையாளர்களை ஏற்படுத்தியவர்கள் அந்த இணையாளர்களை - படைப்பதிலும் உணவளிப்பதிலும் அதிகாரத்திலும் அல்லாஹ்விற்கு இணையாக ஆக்கவில்லை. மாறாக நேசிப்பதிலும், பணிவதிலுமே அந்த இணையாளர்களை அல்லாஹ்விற்கு நிகராக ஆக்கினார்கள்.

மேலுள்ள வசனத்தில் அல்லாஹ் விசுவாசிகள் அல்லாஹ்வை நேசிப்பதில் மிகக் கடினமானவர்கள் என்று கூறுகிறான். எனவே, அல்லாஹ்வை நேசிப்பதில் முக்கிய அம்சமான கலிமாவை நேசிப்பது மிகவும் அவசியமானதாக இருக்கிறது.

﴿وَالَّذِينَ كَفَرُوا فَتَعْسًا لَهُمْ وَأَضَلَّ أَعْمَالَهُمْ ذَلِكَ بِأَنَّهُمْ كَرِهُوا مَا أَنْزَلَ اللهُ فَأَحْبَطَ أَعْمَالَهُمْ﴾

இன்னும் (இவ்வேதத்தை) நிராகரிக்கின்றார்களே அத்தகையோர் அவர்களுக்குக் கேடுதான். அவர்களுடைய செயல்களை (அல்லாஹ் வாகிய) அவன் அழித்தும் விட்டான். இது ஏனெனில் அல்லாஹ் இறக்கி வைத்ததை நிச்சயமாக அவர்கள் வெறுத்துவிட்டார்கள் என்ற காரணத்தினாலாகும். ஆதலால் அவர்களுடைய செயல்களையெல்லாம் (அல்லாஹ்வாகிய) அவன் அழித்துவிட்டான். (அல்குர்ஆன் 47:8-9)

இவ்வசனத்தில் அல்லாஹ் தனது தூதர்கள் மீது இறக்கியருளிய வேதங்களை வெறுத்ததினால் அவர்கள் நிராகரிப்பாளர்களாக ஆகிவிட்டார்கள் என்றும் அவர்களின் செயல்கள் அனைத்தும் அழிந்து விட்டன என்றும் கூறுகிறான். அல்லாஹ் இறக்கிய வேதங்களில்

முக்கியமான நம்பிக்கையாக லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கை தான் இருக்கிறது. எனவே, இறைவேதத்திலுள்ள லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை வெறுப்பவர் நிராகரிப்பாளராக ஆகிவிடுவார். மேலும் அவரின் அனைத்து அமல்களும் அழிக்கப்பட்டுவிடும் என்பதை அறியலாம்.

﴿وَنَادَوْا يَا مَالِكُ لِيَقْضِ عَلَيْنَا رَبُّكَ قَالَ إِنَّكُمْ مَاكِثُونَ لَقَدْ جِئْنَاكُمْ بِالْحَقِّ وَلَكِنَّ أَكْثَرَكُمْ لِلْحَقِّ كَارِهُونَ﴾

(நரகத்தின் பொறுப்பாளர்களிடம்) மாலிக்கே! உமது இரட்சகன் எங்களுக்கு (மரணத்தின் மூலமாவது) தீர்ப்பளிக்கட்டும் என்று சப்தமிடுவார்கள் அதற்கு அவர் நிச்சயமாக நீங்கள் (இதே நிலையில் மரணிக்காது) தங்கியிருக்கவேண்டியவர்களே என்று கூறுவார். நிச்சயமாக நாம் உங்களிடம் உண்மையைக் கொண்டுவந்தோம். எனினும் உங்களில் பெரும்பாலோர் அவ்வுண்மையை வெறுக்கின்றவர்களாக இருந்தீர்கள். (அல்குர்ஆன் 43:77-78)

இவ்வசனத்தில் அல்லாஹ் தன்னிடமிருந்து வந்த உண்மைகளை வெறுப்பவர்கள் நரகத்தில் இருப்பார்கள் என்று கூறுகிறான். அல்லாஹ் விடமிருந்து வந்த உண்மைகளில் முதன்மையானது லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற நம்பிக்கை ஆகும். எனவே, லாஇலாஹா இல்லல்லாஹ்வை ஏற்பவர் அக்கலிமாவை வெறுக்காமல் நேசிப்பது மிகவும் அவசியமானதாகும்.

عَنْ أَنَسٍ عَنِ النَّبِيِّ صلى الله عليه وسلم قَالَ «ثَلاَثٌ مَنْ كُنَّ فِيهِ وَجَدَ حَلاَوَةَ الإِيمَانِ أَنْ يَكُونَ اللهُ وَرَسُولُهُ أَحَبَّ إِلَيْهِ مِمَّا سِوَاهُمَا ، وَأَنْ يُحِبَّ الْمَرْءَ لاَ يُحِبُّهُ إِلاَّ لِلهِ ، وَأَنْ يَكْرَهَ أَنْ يَعُودَ فِى الْكُفْرِ كَمَا يَكْرَهُ أَنْ يُقْذَفَ فِى النَّارِ»

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள், எவரிடம் மூன்று தன்மைகள் அமைந்துவிட்டனவோ அவர் ஈமானின் சுவையை உணர்ந்தவராவார். (அவை) அல்லாஹ்வும் அவனது தூதரும் ஒருவருக்கு

மற்ற அனைத்தையும் விட அதிக நேசத்திற்குரியவராவது,[1] ஒருவர் மற்றொருவரை அல்லாஹ்வுக்காகவே நேசிப்பது, குப்ரிலிருந்து அல்லாஹ் அவரை விடுவித்த பின் நெருப்பில் வீசப்படுவதை வெறுப்பது போல் இறைநிராகரிப்புக்குத் திரும்பிச் செல்வதை வெறுப்பது. (அறிவிப்பாளர்: அனஸ் رضي الله عنه நூல்: புகாரி - 21)

---------------

1. ஷெய்க்குல் இஸ்லாம் இப்னு தைமிய்யா (رحمه الله) அவர்கள் கூறுகிறார்கள்:

அல்லாஹ்வை நேசிப்பது என்பது அவனது உள்ளமைக்காகவே நேசிக்கிறோம். மற்றவகர்ளை நேசிப்பது என்பது அவர்களின் தனிப்பட்ட உள்ளமைக்காக அல்லாமல் அல்லாஹ் நேசிக்க வேண்டும் என்று கூறியதினால் அல்லாஹ்விற்காக மற்றவர்களை நேசிக்கிறோம். (மஜ்முயுல் ஃபதாவா 10-267)

ஆக, ஒரு முஸ்லிம் தன் உயிரை விட மேலாக அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களை நேசிப்பது கூட அல்லாஹ்விற்காக தான் என்பதை அறிய வேண்டும்.

அல்லாஹ்வின் மீது அன்பு கொள்வது வணக்கமாகும். வணக்கங்களின் அடிப்படைகளில் ஒன்றாக அல்லாஹ்வின் மீது அன்பு கொள்வது இருக்கிறது. எனவே, அல்லாஹ்வின் மீது கொண்டுள்ள அன்பில் பிறரை இணையாக்குவது இணைவைப்பாகும்.

## متى ينفع الإنسان قول لا إله إلا الله ومتى لا ينفعه

## லாஇலாஹா இல்லல்லாஹ் எப்போது பயனளிக்கும்?

عن أَنَسُ بْنُ مَالِكٍ أَنَّ نَبِىَّ اللهِ صلى الله عليه وسلم وَمُعَاذُ بْنُ جَبَلٍ رَدِيفُهُ عَلَى الرَّحْلِ قَالَ يَا مُعَاذُ قَالَ لَبَّيْكَ رَسُولَ اللهِ وَسَعْدَيْكَ. قَالَ يَا مُعَاذُ. قَالَ لَبَّيْكَ رَسُولَ اللهِ وَسَعْدَيْكَ. قَالَ « يَا مُعَاذُ ». قَالَ لَبَّيْكَ رَسُولَ اللهِ وَسَعْدَيْكَ. قَالَ « مَا مِنْ عَبْدٍ يَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَأَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ إِلاَّ حَرَّمَهُ اللهُ عَلَى النَّارِ (مسلم)

(ஒரு பயணத்தில்) நபி ﷺ அவர்கள் தமக்குப் பின்னால் வாகனத்தில் அமர்ந்திருந்த முஆத்பின் ஜபல் رضي الله عنه அவர்களை "முஆத்!" என்று அழைத்தார்கள். "அல்லாஹ்வின் தூதரே! இதோ! உங்களுக்குக் கீழ்ப்படியக் காத்திருக்கிறேன்(கூறுங்கள்)" என்று முஆத் பதிலளித்தார்கள். (சிறிது தூரம் சென்ற பின்) "முஆத்!" என்று (மீண்டும்) அழைத்தார்கள். முஆத் رضي الله عنه அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! இதோ! உங்களுக்குக் கீழ்ப்படியக் காத்திருக்கிறேன் (கூறுங்கள்)" என்றார்கள். (இன்னும் சிறிது தூரம் சென்ற பின்) "முஆத்!" என்று (மீண்டும்) அழைத்தார்கள். முஆத் رضي الله عنه அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன் (கூறுங்கள்)" என்றார்கள். பிறகு நபி ﷺ அவர்கள், "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும் முஹம்மது ﷺ அவர்கள் அவனுடைய அடியாரும் தூதரும் ஆவார்கள் என்றும்

உறுதி கூறுகின்ற எந்த அடியாருக்கும் அல்லாஹ் நரகத்தைத் தடை செய்யாமல் இருப்பதில்லை" என்று கூறினார்கள். (அறிவிப்பாளர்: அனஸ் பின் மாலிக், நூல்: முஸ்லிம்)

இதுபோன்ற கருத்தில் வந்துள்ள ஹதீஸ்களை அடிப்படையாக வைத்து சிலர், லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை ஒருவர் நாவினால் கூறிவிட்டாலே அவர் முஸ்லிமாக ஆகிவிடுவார். அவர் மீது அல்லாஹ் நரகத்தை ஹராமாக்கி விடுகிறான் என உறுதியாக நம்புகின்றனர். மேலும் ஒருவர் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறிவிட்டு இணைவைத்தாலும் அவரை முஸ்லிமாகதான் பார்க்க வேண்டும் என்றும் வாதிடுகின்றனர்.

இது சரியான வாதமாகுமா? இஸ்லாம் மார்க்கம் இது பற்றி என்ன கூறுகிறது? என்பதைப் பற்றி இனி பார்ப்போம்!

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை கூறியவர் சொர்க்கத்திற்கு செல்வார் என்று ஹதீஸ்களில் சிலவற்றில் பொதுவாக வந்திருந்தாலும், வேறு சில ஹதீஸ்களில் லாஇலாஹா இல்லல்லாஹ்வின் பொருளை அறிந்து, உள்ளத்தில் எவ்வித சந்தேகமும் கொள்ளாமல் உளத்தூய்மையுடன் கூறியவரே சொர்க்கம் செல்வார் என குறிப்பிட்டு வந்துள்ளது.

عَنْ عُثْمَانَ قَالَ قَالَ رَسُولُ اللهِ صلى الله عليه وسلم « مَنْ مَاتَ وَهُوَ يَعْلَمُ أَنَّهُ لاَ إِلَهَ إِلاَّ اللهُ دَخَلَ الْجَنَّةَ »

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள், எவர் மரணிக்கும் போது லாஇலாஹா இல்லல்லாஹ்வை அறிந்தவராக மரணிக்கிறாரோ அவர் சொர்க்கத்தில் நுழைவார். (அறிவிப்பாளர்: உஸ்மான் பின் அப்ஃஃபான் رضي الله عنه நூல்: முஸ்லிம்)

قَالَ رَسُولُ اللهِ صلى الله عليه وسلم «فَإِنَّ اللهَ قَدْ حَرَّمَ عَلَى النَّارِ مَنْ قَالَ لاَ إِلَهَ إِلاَّ اللهُ . يَبْتَغِى بِذَلِكَ وَجْهَ اللهِ »

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள், அல்லாஹ்வின் முகத்தை (பொருத்தத்தை) நாடி எவர் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று

கூறினாரோ அவர் மீது அல்லாஹ் நரகத்தை (நிரந்தரமாக தங்குவதற்கு) ஹராமாக்கி விட்டான். (புகாரி - 425)

أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَأَنِّى رَسُولُ اللهِ لاَ يَلْقَى اللهَ بِهِمَا عَبْدٌ غَيْرَ شَاكٍّ فِيهِمَا إِلاَّ دَخَلَ الْجَنَّةَ

உண்மையான வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும், நான் அல்லாஹ்வின் தூதர் ஆவேன் என்றும் நான் சாட்சி கூறுகிறேன். இவ்விரு உறுதிமொழிகளின் மீது எவ்வித சந்தேகமும் கொள்ளாமல் அல்லாஹ்வை சந்திக்கும் அடியார் சொர்க்கம் செல்லாமல் இருக்கமாட்டார் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். (நூல்: முஸ்லிம் - 44)

ஆக, லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை நாவினால் மொழிந்து விடுவதினால் மட்டுமே ஒருவர் முஸ்லிம் ஆகிவிட மாட்டார். லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவின் பொருளை அறிந்து, அதனை மன உறுதியுடன், தூய எண்ணத்துடன் கூறினால் மட்டுமே ஒருவர் முஸ்லிம் ஆவார் என்பதை நபி ﷺ அவர்களின் மற்ற ஹதீஸ்களை கொண்டு அறிய முடிகிறது. மேலும் இது தொடர்பாக மார்க்க அறிஞர்களின் விளக்கங்களை பார்ப்போம்.

### இமாம் முஹம்மத் பின் அப்துல் வஹ்ஹாப் (رحمه الله)

இமாம் முஹம்மத் பின் அப்துல் வஹ்ஹாப் (رحمه الله) அவர்கள் கூறுகிறார்கள், நபி ﷺ அவர்கள் உஸாமா பின் ஜைத்திடம் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறியதற்கு பிறகும் அந்த மனிதரை ஏன் நீங்கள் கொலை செய்தீர்கள் என்று கூறிய ஹதீஸையும், இதுபோன்ற பொருளில் வந்துள்ள ஹதீஸ்களையும் ஆதாரமாக கொண்டு லாஇலாஹா இல்லல்லாஹ் கூறியவர்கள் என்ன செய்தாலும் அவர்கள் முஸ்லிம்களாக தான் இருப்பார்கள் என சில அறிவிலிகள் கூறுகின்றனர்.

இத்தகைய அறிவிலிகளுக்கு நாம் கூறுவது என்னவெனில், நபி ﷺ அவர்கள் லாஇலாஹா இல்லல்லாஹ் என கூறிய யூதர்களை தான் போர்க்களத்தில் கொன்றார்கள். லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறி,

தொழுகையை நிறைவேற்றிய பனூ ஹனீஃப் கூட்டத்தினரை எதிர்த்துதான் ஸஹாபாக்கள் போர் செய்தார்கள். அலீ ﵁ அவர்களும் தன் ஆட்சி காலத்தில் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறிய கவாரிஜ்களை எதிர்த்துதான் போர் செய்தார்கள்.

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை கூறிய ஒருவர் மறுமையை மறுத்தால் அது குஃப்ராகும். அவ்வாறே இஸ்லாத்தின் கடமைகளில் ஒன்றை மறுத்தாலும் அதுவும் குஃப்ராகும் என்பதை இந்த அறிவிலிகளும் ஒப்புக் கொள்ளதான் செய்கிறார்கள். இந்நிலையில இஸ்லாத்தின் இதர விஷயங்களை மறுப்பவரின் நம்பிக்கையே ஒருவருக்கு பயனளிக்காது என்றிருக்கும் போது, தூதர்கள் கொண்டு வந்த மார்க்கத்தில் அடிப்படையாகவும், தலையாயதாகவும் உள்ள லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை முறையாக நம்பிக்கை கொள்ளாதவரின் நம்பிக்கை மாத்திரம் எவ்வாறு அவருக்கு பயனளிக்கும்?

**மேலும் இமாம் முஹம்மத் பின் அப்துல் வஹ்ஹாப் (رحمه الله) அவர்கள் கூறுகிறார்கள்:**

உஸாமா பின் ஜைத் ﵁ அவர்கள் லாஇல்லல்லாஹ் கூறிய மனிதரை கொன்றதற்கான காரணம் அந்த மனிதர் தன்னுடைய உயிரை பாதுகாப்பதற்காக தான் கலிமாவை கூறுகிறார் என உஸாமா பின் ஜைத் அவர்கள் விளங்கினார்கள்.

ஒரு மனிதர் இஸ்லாத்தை வெளிப்படுத்தினால் அவரை முஸ்லிமாகதான் பார்க்க வேண்டும். எனினும் இஸ்லாத்தை தகர்க்க கூடிய காரியங்களில் அவர் ஈடுபடுவது நிருபணமாகும் பட்சத்தில் அவர் முஸ்லிமாக இருக்கமாட்டார். ஆகவேதான் அல்லாஹ் கூறுகிறான்,

﴿يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا إِذَا ضَرَبْتُمْ فِي سَبِيلِ اللهِ فَتَبَيَّنُوا﴾

விசுவாசங்கொண்டோரே! அல்லாஹ்வுடைய பாதையில் (போருக்காக) நீங்கள் சென்றால் (வழியில் எதிர்ப்படுவோர் யார் என்பதைத்) தெளிவு படுத்திக் கொள்ளுங்கள். (அல்குர்ஆன் 4:94)

நபி ﷺ அவர்கள் கூறினார்கள், மக்கள் லாஇலாஹா இல்லல்லாஹ்

என்ற கலிமாவை கூறுகின்ற வரை நான் அவர்களுடன் போர் செய்ய வேண்டும் என கட்டளையிடப்பட்டுள்ளேன். (புகாரி - 392)

நபி ﷺ அவர்கள் இவ்வாறு கூறியிருந்தாலும், வேறு சில ஹதீஸ்களில் கவாரிஜ்களைப் பற்றி கூறும்போது,

நான் அவர்களை அடைந்தால் ஆத் சமூகத்தார் அழிக்கப்பட்டது போல் அவர்களை அழித்து விடுவேன் என்றார்கள். (புகாரி - 3344)

இந்த கவாரிஜ்கள்தான் அதிகமாக லாஇலாஹா இல்லல்லாஹ்வை மொழிந்தார்கள். ஸஹாபாக்களை விட வணக்கங்களில் அதிகம் நாட்டம் கொண்டவர்களாக இருந்தார்கள். இவர்களின் வணக்கங்களைப் பார்த்து ஸஹாபாக்களே தங்களின் வணக்கங்களை குறைவாக மதிப்பிட்டார்கள். இந்த அளவிற்கு கவாரிஜ்கள் செயல்பட்டாலும் அவர்கள் கூறிய லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவும், அவர்களின் அதிகமான வணக்கங்களும் அவர்களுக்கு எந்த பயனையும் அளிக்கவில்லை.

## ஷெய்க்குல் இஸ்லாம் இப்னு தைமிய்யா (رحمه الله)

இப்னு தைமிய்யா (رحمه الله) அவர்கள் கூறுகிறார்கள், லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை கூறுபவர்களில் அதிகமானோர் அக்கலிமாவை உறுதியுடனும், தூய எண்ணத்துடனும் கூறுவதில்லை. ஆகவே தான் எவர் கலிமாவை முறையாக அறியாமல் இருக்கின்றாரோ அவரின் மரணவேளையில் அவருக்கும் கலிமாவிற்கு மத்தியில் தடுப்பேற்படுத்தப்பட்டு அவரால் கலிமாவை கூற முடியாத நிலை ஏற்பட்டுவிடுமோ என அஞ்சப்படுகிறது.

மேலும் ஷெய்குல் இஸ்லாம் (رحمه الله) அவர்கள் கூறுகிறார்கள், லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை மரணதருவாயில் கூறுபவர்களில் அதிகமானோர் அந்த கலிமாவை உள்ளத்திலிருந்து கூறாமல், பழக்க தோஷத்திலும் மற்றவர்கள் கூறியதை நாம் கூற வேண்டும் என்ற நிலையில் இருந்து தான் கூறுகிறார்கள். இவர்களின் நிலை கப்ரில் கேள்விகள் கேட்கப்படுபவர் நிலையைப் போன்று தான் இருக்கிறது.

நபி ﷺ அவர்களைப் பற்றி கப்ரில் கேட்கப்படும் போது இறை நம்பிக்கையாளர்கள் சரியான பதிலை அளிப்பார்கள். நயவஞ்சகர்கள், உறுதியான முறையில் நம்பிக்கை கொள்ளாதவர்கள் சரியான பதிலை அளிக்க மாட்டார்கள்.

நபி ﷺ அவர்கள் தங்களின் உரையில் அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து, 'எனக்கு இது வரை காட்டப்படாத சொர்க்கம், நரகம் உட்பட அத்தனைப் பொருட்களையும் இந்த இடத்திலேயே கண்டேன். மேலும் எனக்கு அறிவிக்கப்பட்டது. நிச்சயமாக நீங்கள் உங்கள் மண்ணறைகளில் மஸீஹுத் தஜ்ஜால் என்பவனுடைய குழப்பத்துக்கு நிகரான சோதனைக்கு உள்ளாக்கப்படுவீர்கள். (அப்போது மண்ணறையில் அடக்கம் செய்யப் பட்டவரிடம்) 'இந்த மனிதரைப் பற்றி உமக்கு என்ன தெரியும்?' என்று கேட்கப்படும்.

நம்பிக்கையாளர் 'அவர்கள் இறைத்தூதர் முஹம்மத் ﷺ ஆவார்கள்; அவர்கள் எங்களுக்குத் தெளிவான சான்றுகளையும் நேர்வழியையும் கொண்டு வந்தார்கள்; நாங்கள் (அவர்களின் அழைப்பை) ஏற்றோம்' அவர்களைப் பின் பற்றினோம்; அவர்கள் முஹம்மத் ﷺ அவர்கள்தாம்' என்று மும்முறை கூறுவார். அப்போது '(சுவனப் பேரின்பங்களைப் பெறத்) தகுதி பெற்றவராக நீர் (நிம்மதியாக) உறங்குவீராக!' என்றும் 'நிச்சயமாகவே நீர் நபி ﷺ அவர்களைப் பற்றி இத்தகைய உறுதியான நம்பிக்கையுடையவராகவே (உலகில்) இருந்தீர் என்று நாமறிவோம்' என்றும் கூறப்படும்.

நயவஞ்சகனோ 'எனக்கு எதுவும் தெரியாது; மக்கள் அவரைப் பற்றி ஏதோ சொல்லிக் கொண்டிருக்கக் கேட்டிருக்கிறேன். எனவே, நானும் அது போன்று கூறினேன்' என்பான்' என்று கூறினார்கள்” (புகாரி - 86)

## இப்னு ரஜப் அல்அன்பலி (رحمه الله)

இப்னு ரஜப் (رحمه الله) அவர்கள் தனது கலிமத்துல் இக்லாஸ் என்ற நூலில் கூறுகிறார்கள், லாஇலாஹா இல்லல்லாஹ் முஹம்மத்து ரஸூலுல்லாஹ் என்ற கலிமாவை சாட்சி கூறுகின்றவரை அவர்களுடன் போர் செய்ய வேண்டும் என நான் கட்டளையிடப்பட்டுள்ளேன் என நபி ﷺ அவர்கள் கூறியதை ஆதாரமாக கொண்டு உமர் رضي الله عنه அவர்களும் மற்ற சில ஸஹாபாக்களும் ஷஹாதா கலிமாவிற்கு எவர் சாட்சியம் அளிக்கின்றாரோ அவரை எதிர்த்து (இஸ்லாமிய ஆட்சியாளர்) போர் செய்யக் கூடாது என்றார்கள். அதனடிப்படையில்தான் லாஇலாஹா

இல்லல்லாஹ் கூறிவிட்டு ஜகாத் தர மறுப்பவர்களை[1] எதிர்த்து போர் செய்யக் கூடாது என கூறினார்கள்.

ஆனால் அபூபக்கர் சித்திக் ﷺ அவர்கள் கலிமாவில் கூறப்பட்டுள்ள படி அல்லாஹ் மற்றும் அவனது தூதரின் உரிமையை நிலைநாட்டுவதைக் கொண்டே ஒருவரின் உயிருக்கு அபயமளிக்கப்படும் என விளங்கினார்கள்.

அல்லாஹ்வின தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள், இவற்றை அவர்கள் செய்து விடுவார்களானால் தம் உயிர், உடைமைகளை என்னிடமிருந்து பாதுகாத்து கொள்வார்கள். இஸ்லாத்தின் (வேறு) உரிமைகளில் அவர்கள் வரம்பு மீறினாலே தவிர! மேலும் அவர்களின் விசாரணை அல்லாஹ்விடமே உள்ளது என கூறினார்கள். (புகாரி - 25)

நபி ﷺ அவர்களின் கூற்றை அடிப்படையாக கொண்டே அபூபக்கர் அவர்கள் ஜகாத் செல்வத்திற்கான உரிமை என்றார்கள்.

عَنِ ابْنِ عُمَرَ أَنَّ رَسُولَ اللهِ صلى الله عليه وسلم قَالَ « أُمِرْتُ أَنْ أُقَاتِلَ النَّاسَ حَتَّى يَشْهَدُوا أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللهِ ، وَيُقِيمُوا الصَّلاَةَ ، وَيُؤْتُوا الزَّكَاةَ ، فَإِذَا فَعَلُوا ذَلِكَ عَصَمُوا مِنِّى دِمَاءَهُمْ وَأَمْوَالَهُمْ إِلاَّ بِحَقِّ الإِسْلاَمِ ، وَحِسَابُهُمْ عَلَى اللهِ»

மக்கள் உண்மையான வணக்கத்திற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும், முஹம்மது ﷺ அவர்கள் அல்லாஹ்வின் தூதராவார்கள் என சாட்சி கூறி, தொழுகையை நிலைநாட்டி, ஜகாத் கொடுக்கும் வரை அவர்களுடன் போரிட வேண்டும் என நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். இவற்றை அவர்கள் செய்தால், தம் உயிர், உடைமைகளை என்னிடமிருந்து பாதுகாத்து கொள்வார்கள்.

1. அபூபக்கர் ﷺ அவர்களின் ஆட்சி காலத்தில் ஜகாத் தர மறுத்தவர்கள் நபி ﷺ அவர்களின் மரணத்திற்குப் பின் ஜகாத் என்ற கடமை இல்லை என்ற அடிப்படையில் மறுத்தார்கள். அத்தகையவர்களோடுதான் அபூபக்கர் ﷺ அவர்கள் போர் செய்தார்கள்.

இஸ்லாத்தின் (மற்ற) உரிமைகளில் வரம்பு மீறினாலே தவிர! அவர்களின் கேள்விகணக்கு அல்லாஹ்விடமே உள்ளது என நபி ﷺ அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பாளர்: இப்னு உமர் رضي الله عنه நூல்: புகாரி - 25)

அல்லாஹ்வின் கூற்றும் இதே கருத்தையே நமக்கு தெரிவிக்கின்றது,

﴿فَإِنْ تَابُوا وَأَقَامُوا الصَّلَاةَ وَآتَوُا الزَّكَاةَ فَخَلُّوا سَبِيلَهُمْ إِنَّ اللهَ غَفُورٌ رَحِيمٌ﴾

அவர்கள் தவ்பா செய்து, தொழுகையையும் நிறைவேற்றி, ஜகாத்தையும் கொடுத்துவந்தால் அவர்கள் வழியில் (அவர்களை) விட்டுவிடுங்கள். நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்பவன் மிகக் கிருபையுடையவன். (அல்குர்ஆன் 9:5)

﴿فَإِنْ تَابُوا وَأَقَامُوا الصَّلَاةَ وَآتَوُا الزَّكَاةَ فَإِخْوَانُكُمْ فِي الدِّينِ﴾

ஆகவே அவர்கள் தவ்பா செய்து, தொழுகையை நிறைவேற்றி, ஜகாத்தை கொடுத்து வந்தால். அப்போது (அவர்கள்) உங்களுக்கு மார்க்கத்தில் சகோதரர்களாவர். (அல்குர்ஆன் 9:11)

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற நம்பிக்கையுடன் இஸ்லாத்தின் கடமைகளை ஏற்றிருந்தால் மட்டுமே ஒருவர் இஸ்லாமிய சகோதரனாக ஆக முடியும். அபூபக்கர் சித்திக் رضي الله عنه அவர்கள் இதனை ஸஹாபாக்களுக்கு விளக்கியதற்கு பிறகு உமர் رضي الله عنه அவர்களும் மற்ற ஸஹாபாக்களும் அபூபக்கர் சித்திக் رضي الله عنه அவர்களின் விளக்கத்தை ஏற்றுக் கொண்டார்கள். எனவே, லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை கூறுவதினால் மட்டுமே ஒருவர் இஸ்லாமிய ஆட்சியின் கீழ் வாழும்போது உலக தண்டனைகளிலிருந்து தப்பிவிட முடியாது. இஸ்லாத்தின் உரிமைகளில் ஏதேனும் ஒன்றில் வரம்பு மீறுவதின் மூலம் உலக தண்டனைகளை அவர் பெறுவார். அவ்வாறே மறுமையிலும் அதற்கான தண்டனையை அல்லாஹ் அவருக்கு அளிப்பான். (இப்னு ரஜப் ஹம்பலி ரஹ் அவர்களின் கூற்று முற்றுப் பெறுகிறது)

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை கூறிவிட்டு ஷிர்க்கான காரியங்களில் எந்த ஒன்றை செய்தாலும் அவர் முஸ்லிமாக தான்

இருப்பார், அவரை முஸ்லிமாகத்தான் பார்க்க வேண்டும் என்று கூறுவதெல்லாம் தவறான நம்பிக்கையாகும். லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறிவிட்டு அல்லாஹ்விற்கு இணைவைப்பதின் மூலம் அல்லது இஸ்லாத்தின் கடமைகளில் ஏதேனும் ஒன்றை நிராகரிப்பதின் மூலம் ஒருவர் இஸ்லாத்தை விட்டு வெளியேறி விடுவார். மேலும் அவர் இஸ்லாத்தின் பார்வையில் காஃபிராக ஆகி விடுவார் என்று இஸ்லாம் கூறுகிறது.

---------------

تعريف الإيمان

## லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவின் மீது எவ்வாறு ஈமான் கொள்ள வேண்டும்?

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவின் மீது எவ்வாறு ஈமான் கொள்ள வேண்டும் என்பதை அறிய வேண்டுமெனில் ஈமான் என்றால் என்ன? அதற்கான வரைவிலக்கணம் என்ன என்பதை அறிந்திருப்பது அவசியமாகும். எனவே, அதனை முதலில் அறிவோம்!

ஈமானின் வரைவிலக்கணம்

நாவினால் மொழிந்து, உள்ளத்தால் உண்மைப்படுத்தி, உடல் உறுப்புகளால் செயல்படுதவற்கு பெயரே ஈமான் ஆகும். மேலும் ஈமான் நன்மையான காரியங்களில் ஈடுபடுவதின் மூலம் அதிகரிக்கும். பாவமான காரியங்களில் ஈடுபடுவதின் மூலம் ஈமான் குறையும்.

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை நாவினால் மொழிபவர் அதனை உள்ளத்தால் உண்மைப்படுத்தி, உடல் உறுப்புகளால் வெளிப்படையாகவும், அந்தரங்கமாகவும் செயல்படுத்தி அல்லாஹ் ஒருவனை மட்டும் வணங்கி, அவனுக்கு எந்த ஒன்றையும் இணையாக்காமல் இருந்தால் அவர் லாஇலாஹா இல்லல்லாஹ்வின் மீது சரியான முறையில் ஈமான் கொண்ட முஸ்லிம் ஆவார்.

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை நாவினால் மொழிபவர் அதனடிப்படையில் தன்னுடைய செயல்பாடுகளை வெளிப்படையாக அமைத்துக் கொள்கிறார். ஆனால் அந்த கலிமாவை தனது உள்ளத்தில் நம்பாமல் இருக்கிறார் எனில் அவர் முனாஃபிக் ஆவார்.

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை நாவினால் மொழிபவர் அந்த கொள்கைக்கு மாற்றமாக ஷிர்க்கான காரியங்களை செய்பவராக இருந்தால் அவர் முஷ்ரிக் ஆவார்.

ஆக, லாஇலாஹா இல்லல்லாஹ் என்று சாட்சி கூறும்போது, நாவினால் மொழிந்து, உள்ளத்தால் உண்மைப்படுத்தி, உடல் உறுப்புகளால் செயல்படுத்துவதே உண்மையான நம்பிக்கையாகும். செயல்களும் ஈமானில் இருப்பதினால் லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவின் மீது நம்பிக்கை கொள்பவர் அதனை தன்வாழ்வில் செயலில் கொண்டு வருவதும் மிக அவசியமாகும்.

அமல்களும் (செயல்களும்) ஈமானின் வரைவிலக்கணத்தில் உள்ளது என்பதற்கான ஆதாரம்

ஈமான் என்ற இறைநம்பிக்கையை பற்றி சிலர் விவரிக்கும் போது நாவினால் மொழிந்து, உள்ளத்தால் உண்மைப்படுத்துவதற்கு பெயர் ஈமானாகும் என்று கூறி, அமல்களை ஈமானில் இருந்து வெளியேற்றி விடுகின்றனர். அமல்களை ஈமானின் வரைவிலக்கணத்திலிருந்து வெளியேற்றுவது தவறான கொள்கையாகும். ஏனெனில் இஸ்லாம் அமல்களையும் ஈமான் என்று கூறுகிறது.

அல்லாஹ் அல்குர்ஆனில் (2:143) வசனத்தில் கூறுகிறான்,

﴿وَمَا كَانَ اللهُ لِيُضِيعَ إِيمَانَكُمْ﴾

உங்களுடைய விசுவாசத்தை (நீங்கள் இதற்கு முன்பு பைத்துல் முகத்தஸை நோக்கி தொழுத தொழுகையை) ஒருபோதும் அல்லாஹ் வீணாக்குபவனாக இல்லை.

இந்த வசனம் எப்போது இறங்கியது என்பது தொடர்பான ஹதீஸ்

عَنِ الْبَرَاءِ أَنَّ النَّبِيَّ صلى الله عليه وسلم كَانَ أَوَّلَ مَا قَدِمَ الْمَدِينَةَ نَزَلَ عَلَى أَجْدَادِهِ أَوْ قَالَ أَخْوَالِهِ مِنَ الأَنْصَارِ ، وَأَنَّهُ صَلَّى قِبَلَ بَيْتِ الْمَقْدِسِ سِتَّةَ عَشَرَ شَهْرًا ، أَوْ سَبْعَةَ عَشَرَ شَهْرًا ، وَكَانَ يُعْجِبُهُ أَنْ تَكُونَ قِبْلَتُهُ قِبَلَ الْبَيْتِ ، وَأَنَّهُ صَلَّى أَوَّلَ صَلاَةٍ صَلاَّهَا صَلاَةَ الْعَصْرِ ، وَصَلَّى مَعَهُ قَوْمٌ ، فَخَرَجَ رَجُلٌ مِمَّنْ

صَلَّى مَعَهُ ، فَمَرَّ عَلَى أَهْلِ مَسْجِدٍ ، وَهُمْ رَاكِعُونَ فَقَالَ أَشْهَدُ بِاللهِ لَقَدْ صَلَّيْتُ مَعَ رَسُولِ اللهِ صلى الله عليه وسلم قِبَلَ مَكَّةَ ، فَدَارُوا كَمَا هُمْ قِبَلَ الْبَيْتِ ، وَكَانَتِ الْيَهُودُ قَدْ أَعْجَبَهُمْ إِذْ كَانَ يُصَلِّى قِبَلَ بَيْتِ الْمَقْدِسِ ، وَأَهْلُ الْكِتَابِ ، فَلَمَّا وَلَّى وَجْهَهُ قِبَلَ الْبَيْتِ أَنْكَرُوا ذَلِكَ . قَالَ زُهَيْرٌ حَدَّثَنَا أَبُو إِسْحَاقَ عَنِ الْبَرَاءِ فِى حَدِيثِهِ هَذَا أَنَّهُ مَاتَ عَلَى الْقِبْلَةِ قَبْلَ أَنْ تُحَوَّلَ رِجَالٌ وَقُتِلُوا ، فَلَمْ نَدْرِ مَا نَقُولُ فِيهِمْ ، فَأَنْزَلَ اللهُ تَعَالَى ( وَمَا كَانَ اللهُ لِيُضِيعَ إِيمَانَكُمْ )

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் மதீனாவிற்கு வந்த ஆரம்பத்தில் அவர்களின் பாட்டனார்களி(ன் வம்சாவழியினரி)டம் அல்லது அன்சாரி களைச் சேர்ந்த அவர்களின் மாமன்மார்களி(ன் வம்சாவழியினரி)டம் தங்கியிருந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் பதினாறு அல்லது பதினேழு மாதங்கள் பைத்துல் முகத்தஸை நோக்கியே தொழுது வந்தார்கள். (இருப்பினும்) தொழுகையில் தாம் முன்னோக்கித் தொழும் திசை (மக்காவிலுள்ள) கஅபா ஆலயமாக இருக்க வேண்டும் என்பதே அவர்களின் விருப்பமாக இருந்தது. (கஅபாவை நோக்கி) அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் தொழுத முதல் தொழுகை அஸர் தொழுகையாகும். அவர்களுடன் மற்றவர்களும் தொழுதார்கள். நபி ﷺ அவர்களுடன் சேர்ந்து தொழுதவர்களில் ஒருவர் அங்கிருந்து புறப்பட்டு வேறு ஒரு பள்ளிவாசலுக்கருகே சென்றார். அங்கே பைத்துல் முகத்தஸை நோக்கித் தொழுது கொண்டிருந்தவர்களிடம், 'நான் அல்லாஹ் மீது ஆணையாக மக்காவை (கஅபாவை) முன்னோக்கி அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடன் சேர்ந்து தொழுதுவிட்டு வருகிறேன்' என்று கூறினார். உடனே மக்கள் (தொழுகையில்) அப்போதிருந்த நிலையிலிருந்த படியே கஅபாவை நோக்கித் திரும்பினார்கள். அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் பைத்துல் முகத்தஸை நோக்கித் தொழுது வந்தது யூதர்களுக்கும் ஏனைய வேதக்காரர்களுக்கும் மகிழ்ச்சியாகவே இருந்து வந்தது. (தொழுகையில்) தம் முகத்தை நபி ﷺ அவர்கள் கஅபா

நோக்கித் திருப்பிக் கொள்ள ஆரம்பித்ததும் அவர்கள் அதை வெறுக்க ஆரம்பித்தார்கள்.

மற்றோர் அறிவிப்பில், தொழுகையில் முன்னோக்கித் தொழும் திசையான கிப்லா மாற்றப்படுவதற்கு முன்னர் பைத்துல் முகத்தஸை நோக்கித் தொழுத காலத்திலேயே சிலர் இறந்துவிட்டனர்; சிலர் கொல்லப் பட்டு விட்டனர். நாங்கள் அவர்களைப் பற்றி என்ன கூறுவது? என்று அறியாதவர்களாயிருந்தோம். அப்போது, 'உங்கள் நம்பிக்கையை அல்லாஹ் வீணாக்க மாட்டான்' என்ற வசனத்தை அல்லாஹ் அருளினான்! என்று பரா ؓ அறிவித்தார். (புகாரி - 40)

கிப்லாவின் சட்டம் மாற்றப்படுவதற்கு முன்பு தொழுத தொழுகையின் நிலை என்னவாகும் என ஸஹாபாக்கள் கேட்டபோது, அல்லாஹ் அதற்கு பதில் அளிக்கும் விதமாக உங்களின் ஈமானை அல்லாஹ் வீணாக்கமாட்டான் என்ற வசனத்தை கூறுகிறான். இதிலிருந்து தொழுகை என்ற அமல் ஈமானாகும் என்பதை அறியலாம்.

இமாம் புகாரி (**رحمه الله**) அவர்கள் ஸஹிஹுல் புகாரியில் இந்த ஹதீஸை பதிவு செய்து விட்டு இதற்கு ' தொழுகை ஈமானின் ஓர் அம்சமாகும் என்று தலைப்பு வைத்துள்ளார்கள்.

عَنْ أَبِى هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللهِ صلى الله عليه وسلم «الإِيمَانُ بِضْعٌ وَسَبْعُونَ أَوْ بِضْعٌ وَسِتُّونَ شُعْبَةً فَأَفْضَلُهَا قَوْلُ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَأَدْنَاهَا إِمَاطَةُ الأَذَى عَنِ الطَّرِيقِ وَالْحَيَاءُ شُعْبَةٌ مِنَ الإِيمَانِ»

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள், ஈமான் (இறைநம்பிக்கை) என்பது எழுபதுக்கும் அதிகமான அல்லது அறுபதுக்கும் அதிகமான கிளைகள் கொண்டதாகும். அவற்றில் உயர்ந்தது லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவாகும். அவற்றில் தாழ்ந்தது தொல்லை தரும் பொருளை பாதையிலிருந்து அப்புறப்புடுத்துவதாகும். வெட்கமும் ஈமானின் ஒரு கிளைதான். (அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ நூல்: முஸ்லிம - 58)

அமல்களும் ஈமானின் ஒரு பகுதியாக இருக்கிறது. எனவே, லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை மொழிபவர் அமல்கள் தொடர்பானவற்றிலும் கவனமாக இருக்க வேண்டும். அமல்களில் சிலவற்றை விடுவதின் மூலம் ஒருவர் இஸ்லாத்தை விட்டே வெளியேறி விடுவார். உதாரணத்திற்கு அல்லாஹ்வை நேசிக்காமல் இருப்பது, அல்லாஹ்விற்கு அஞ்சாமல் இருப்பது, தொழுகையை விடுவது.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்,

عَنْ أَبِى سُفْيَانَ قَالَ سَمِعْتُ جَابِرًا يَقُولُ سَمِعْتُ النَّبِىَّ –صلى الله عليه وسلم– يَقُولُ « إِنَّ بَيْنَ الرَّجُلِ وَبَيْنَ الشِّرْكِ وَالْكُفْرِ تَرْكَ الصَّلاَةِ ».

ஜாபிர் رضي الله عنه அவர்கள் அறிவிக்கிறார்கள் நபி ﷺ அவர்கள் கூற நான் கேட்டேன், நிச்சயமாக முஸ்லிமுக்கும், இணைவைப்பு மற்றும் குஃப்ருக்கும் மத்தியிலுள்ள வித்தியாசம் தொழுகையை விடுவதுதான். (அறிவிப்பாளர்: அபூ சுஃப்யான், நூல்: முஸ்லிம் - 134)

அப்துல்லாஹ் பின் சகீக் (**رحمه الله**) என்ற தாபியீ கூறுகிறார்கள், அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் தோழர்கள் (உடல் உறுப்புகளின் மூலம் வெளிப்படையாக செய்யப்படும்) அமல்களில் தொழுகையை தவிர வேறு எதனையும் விடுவதை குஃப்ராக பார்க்கவில்லை. (ஹாகிம்)

அமல்களில் சிலவற்றை விடுவதின் மூலம் ஒருவர் இஸ்லாத்தை விட்டு வெளியேற மாட்டார், அவர் முஸ்லிமாகதான் இருப்பார். எனினும் அவரது ஈமானில் அது குறையை ஏற்படுத்தும். உதாரணமாக ஒருவர் ஜகாத் என்ற கடமையை ஏற்றிருந்து கருமித்தனத்தின் காரணமாக அதனை கொடுக்காமல் இருக்கிறார்.

عن أبي هُرَيْرَةَ يَقُولُ قَالَ رَسُولُ الله –صلى الله عليه وسلم– « مَا مِنْ صَاحِبِ ذَهَبٍ وَلاَ فِضَّةٍ لاَ يُؤَدِّى مِنْهَا حَقَّهَا إِلاَّ إِذَا كَانَ يَوْمُ الْقِيَامَةِ صُفِّحَتْ لَهُ صَفَائِحَ مِنْ نَارٍ فَأُحْمِىَ عَلَيْهَا فِى نَارِ جَهَنَّمَ فَيُكْوَى بِهَا جَنْبُهُ وَجَبِينُهُ وَظَهْرُهُ

كُلَّمَا بَرَدَتْ أُعِيدَتْ لَهُ فِى يَوْمٍ كَانَ مِقْدَارُهُ خَمْسِينَ أَلْفَ سَنَةٍ حَتَّى يُقْضَى بَيْنَ الْعِبَادِ فَيُرَى سَبِيلُهُ إِمَّا إِلَى الْجَنَّةِ وَإِمَّا إِلَى النَّارِ »

அபூஹுரைரா ؓ அவர்கள் கூறியதாவது:

"பொன், வெள்ளி ஆகியவற்றைச் சேகரித்து வைத்துக்கொண்டு அவற்றுக்குரிய கடமையை (ஜகாத்) நிறைவேற்றாமல் இருப்பவருக்கு, மறுமை நாளில் நரக நெருப்பில் அவற்றைப் பழுக்கக் காய்ச்சி, உலோகப் பாளமாக மாற்றி, அவருடைய விலாப்புறத்திலும் நெற்றியிலும் முதுகிலும் சூடு போடப்படும். அவை குளிர்ந்துவிடும் போதெல்லாம் மீண்டும் அவ்வாறே (பழுக்கக் காய்ந்த பாளமாக) மாறிவிடும். இவ்வாறு ஒரு நாள் அவர் தண்டிக்கப்படுவார். அ(ந்)த (ஒரு நாளி)ன் அளவு ஐம்பது ஆயிரம் ஆண்டுகளாகும். இறுதியில் அடியார்களிடையே இறுதித்தீர்ப்பு வழங்கப்படும். அப்போது தாம் செல்லவேண்டிய சொர்க்கத்தின் பாதையை, அல்லது நரகத்தின் பாதையை அவர் காண்பார்" என்று அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம் - 1803)

இந்த ஹதீஸில் நபி ﷺ அவர்கள் ஜகாத் தராமல் இருந்தவருக்கு நரகத்தில் வேதனை அளிக்கப்பட்டு பிறகு அவர் சொர்க்கம் செல்பவராக இருந்தால் சொர்க்கம் செல்வார், வேறு பாவங்களுக்கான தண்டனையை பெறுவதாக இருந்தால் மீண்டும் நரகத்திற்கு செல்வார் என கூறுகிறார்கள்.

இந்த ஹதீஸை அடிப்படையாக வைத்துதான் மார்க்க அறிஞர்கள் தொழுகையை தவிர மற்ற வெளிப்படையான அமல்களை ஒருவர் கடமையென ஏற்றிருந்தும் அதனை செயல்படுத்தவில்லையென்றால் அவர் இறைநிராகரிப்பாளராக ஆகிவிட மாட்டார். அவர் முஸ்லிமாக தான் இருப்பார் என கூறுகிறார்கள்.

---------------

آثار لا إله إلا الله

# லாஇலாஹா இல்லல்லாஹ் கொள்கையினால் ஏற்படும் நன்மைகள்

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை தூய எண்ணத்துடன் ஏற்று அதனடிப்படையில் அந்தரங்கமாகவும் வெளிப்படையாகவும் செயல்படும்போது தனிமனிதன் மீதும், மற்ற முஸ்லிம்களின் மீதும் அது பல வகைகளில் நன்மையை ஏற்படுத்துகிறது. அவற்றில் முக்கியமான சில நன்மைகளை மட்டும் பார்ப்போம்!

1 - லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை அடிப்படையாக வைத்தே முஸ்லிம்களுக்கு மத்தியில் ஒற்றுமையை ஏற்படுத்த முடியும். இதுவல்லாத வேறு வழிகளில் ஒற்றுமையை ஏற்படுத்துவது என்பது சாத்தியமற்றதாகும். ஏனெனில் மார்க்கத்தின் அடிப்படையான கொள்கையின் மீது அனைவரும் ஒன்றினையும் போது அவர்களுக்குள் வேற்றுமை, பிரிவினை என்ற நிலை இல்லாமல் ஆகிவிடும். அல்லாஹ் இதுப்பற்றி அல்குர்ஆனில் கூறுகிறான்,

﴿وَاعْتَصِمُوا بِحَبْلِ اللهِ جَمِيعًا وَلَا تَفَرَّقُوا وَاذْكُرُوا نِعْمَتَ اللهِ عَلَيْكُمْ إِذْ كُنْتُمْ أَعْدَاءً فَأَلَّفَ بَيْنَ قُلُوبِكُمْ فَأَصْبَحْتُمْ بِنِعْمَتِهِ إِخْوَانًا وَكُنْتُمْ عَلَى شَفَا حُفْرَةٍ مِنَ النَّارِ فَأَنْقَذَكُمْ مِنْهَا كَذَلِكَ يُبَيِّنُ اللهُ لَكُمْ آيَاتِهِ لَعَلَّكُمْ تَهْتَدُونَ﴾

மேலும் நீங்கள் யாவரும் (ஒன்று சேர்ந்து) அல்லாஹ்வுடைய கயிற்றைப் பலமாக பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள். (உங்களுக்குள் கருத்து வேறுபட்டு) நீங்கள் பிரிந்துவிட வேண்டாம். மேலும் உங்கள் மீது அல்லாஹ் புரிந்திருக்கும் அருளை நினைத்துப் பாருங்கள். நீங்கள்

(ஒருவர் மற்றவருக்கு) விரோதிகளாக இருந்த சமயத்தில் அவன் உங்கள் இதயங்களுக்கிடையே அன்புப் பிணைப்பை உண்டாக்கினான். ஆகவே அவனுடைய பேரருளால் நீங்கள் சகோதரர்களாகி விட்டீர்கள் (அதற்கு முன்னர்) நீங்கள் நரகநெருப்புக் குழியின் விளிம்பின் மீதிருந்தீர்கள். அதிலிருந்தும் அவன் உங்களை ஈடேறச் செய்தான். நீங்கள் நேர்வழி பெறுவதற்காக அல்லாஹ் தன் வசனங்களை உங்களுக்கு இவ்வாறு தெளிவுபடுத்துகிறான். (அல்குர்ஆன் 3:103)

ஸஹாபாக்களுக்கு மத்தியிலிருந்த பிணைப்பு அகீதா என்ற கொள்கையின் மீது எழுப்பப்பட்டு இருந்தது. ஆகவேதான் ஸஹாபாக்கள் தங்களுக்குள் இஜ்திஹாத் (சுய ஆய்வு) தொடர்பான மஸாயில்களில் கருத்து வேறுபாடு கொண்டிருந்தாலும் கொள்கை தொடர்பான நம்பிக்கைகளில் எந்த ஒன்றிலும் கருத்து வேறுபாடு கொள்ளாமல் இருந்தார்கள். இஸ்லாமிய கொள்கையின் மீது அவர்களுக்கு இருந்த ஒற்றுமையை வைத்துதான் அல்லாஹ் அவர்களின் இதயங்களில் பிணைப்பை உண்டாக்கினான்.

அடிப்படை கொள்கையில் கருத்து வேறுபாடு ஏற்பட்டால் மாத்திரமே பிரிவுகளும், பிளவுகளும் உண்டாகும்.

﴿إِنَّ الَّذِينَ فَرَّقُوا دِينَهُمْ وَكَانُوا شِيَعًا لَسْتَ مِنْهُمْ فِي شَيْءٍ إِنَّمَا أَمْرُهُمْ إِلَى اللَّهِ ثُمَّ يُنَبِّئُهُمْ بِمَا كَانُوا يَفْعَلُونَ﴾

நிச்சயமாக தங்கள் மார்க்கத்தை(ப் பலவாறாக)ப் பிரித்து பல பிரிவினர் களாகி விட்டனரே அத்தகையோர் - அவர்களின் எக்காரியத்திலும் நீர் இல்லை. அவர்களுடைய விஷயமெல்லாம் அல்லாஹ்விடமே இருக்கிறது. அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றை பின்னர் அவன் அவர்களுக்கு அறிவித்து விடுவான். (அல்குர்ஆன் 6:159)

ஆகவே லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கையின் மீதல்லாமல் வேறு வழிகளில் ஒற்றுமை என்பது சாத்தியமற்றதாகும். இதனை நபி ﷺ அவர்களின் காலத்தில் வாழ்ந்த மக்களின் இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்னுள்ள நிலையையும், பின்னுள்ள நிலையையும் வைத்து விளங்கலாம்.

இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்பு அவர்கள் தங்களுக்குள்ளே பிளவுப்பட்டு பிரிந்து கிடந்தார்கள். அவர்களுக்கு மத்தியிலான விரோதமும், பகைமையும் அணையா நெருப்பாகத்தான் எரிந்து கொண்டிருந்தது. ஆனால் அதே மக்கள் இஸ்லாத்தின் அடிப்படை கொள்கையான லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை ஏற்ற பிறகு அவர்களுக்கு மத்தியில் இருந்த விரோதம், பகைமையும் மறைந்து அவர்களுக்கு மத்தியில் ஒற்றுமை ஏற்பட்டது.

2 - லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கையே சமூகத்திற்கு மத்தியில் அமைதியையும், நிம்மதியையும் நிலவச் செய்யும். ஏனெனில் உண்மையான வணக்கத்திற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்ற கொள்கை, அந்த அல்லாஹ் எதனை ஹலாலாக்கினானோ அவற்றை செய்யவும், எதனை ஹராமாக்கினானோ அவற்றை விட்டு விலகவும் தூண்டும். இதனால் மக்கள் அநீதி, பகைமை போன்ற தீய காரியங்களை விட்டு விலகியிருப்பார்கள். மேலும் அவர்கள் தங்களுக்கு மத்தியில் சகோதரத்துவத்தையும், நேசத்தையும் உண்டாக்குவதற்கான முயற்சிகளில் ஈடுபடுவார்கள்.

﴿إِنَّمَا الْمُؤْمِنُونَ إِخْوَةٌ﴾

நிச்சயமாக விசுவாசிகள் (ஒருவர் மற்றவருக்கு) சகோதரர்களே! (அல்குர்ஆன் 49:10)

லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை ஏற்பதற்கு முன்பு வரை அரபுலக மக்கள் ஒருவருக்கொருவர் விரோதியாகவும், பகைவர்களாகவும் தான் வாழ்ந்து வந்தார்கள். கொலை, கொள்ளை போன்ற பாவங்களில் ஈடுபடுவதை பெருமையாக எண்ணினார்கள். ஆனால் அதே மக்கள் லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை ஏற்ற பிறகு இந்த பாவங்களிலிருந்தெல்லாம் விலகி ஒருவர் மற்றவருக்கு விருப்பமான சகோதரர்களாக மாறினார்கள் என அல்லாஹ் கூறுகிறான்,

﴿مُحَمَّدٌ رَسُولُ اللهِ وَالَّذِينَ مَعَهُ أَشِدَّاءُ عَلَى الْكُفَّارِ رُحَمَاءُ بَيْنَهُمْ﴾

முஹம்மத் அல்லாஹ்வின் தூதராவார். அவருடன் இருப்பவர்களோ

நிராகாரிப்போர் மீது மிகக் கண்டிப்பானவர்கள். தங்களுக்கிடையே மிக்க அன்புடையவர்கள். (அல்குர்ஆன் 48:29)

﴿وَاذْكُرُوا نِعْمَتَ اللهِ عَلَيْكُمْ إِذْ كُنْتُمْ أَعْدَاءً فَأَلَّفَ بَيْنَ قُلُوبِكُمْ فَأَصْبَحْتُمْ بِنِعْمَتِهِ إِخْوَانًا وَكُنْتُمْ عَلَى شَفَا حُفْرَةٍ مِنَ النَّارِ فَأَنْقَذَكُمْ مِنْهَا كَذَلِكَ يُبَيِّنُ اللهُ لَكُمْ آيَاتِهِ لَعَلَّكُمْ تَهْتَدُونَ﴾

மேலும் உங்கள் மீது அல்லாஹ் புரிந்திருக்கும் அருளை நினைத்துப் பாருங்கள். நீங்கள் (ஒருவர் மற்றவருக்கு) விரோதிகளாக இருந்த சமயத்தில் அவன் உங்கள் இதயங்களுக்கிடையே அன்புப் பிணைப்பை உண்டாக்கினான். ஆகவே அவனுடைய பேரருளால் நீங்கள் சகோதரர் களாகி விட்டீர்கள் (அதற்கு முன்னர்) நீங்கள் நரக நெருப்புக் குழியின் விளிம்பின் மீதிருந்தீர்கள். அதிலிருந்தும் அவன் உங்களை ஈடேறச் செய்தான். நீங்கள் நேர்வழி பெறுவதற்காக அல்லாஹ் தன் வசனங்களை உங்களுக்கு இவ்வாறு தெளிவுபடுத்துகிறான். (அல்குர்ஆன் 3:103)

3 - லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கையின் பக்கம் மக்கள் அனைவரும் ஒன்றினையும் போது அல்லாஹ் நாடினால் அவர்களுக்கு பூமியில் ஆட்சி அதிகாரத்தை வழங்குவான்.

﴿وَعَدَ اللهُ الَّذِينَ آمَنُوا مِنْكُمْ وَعَمِلُوا الصَّالِحَاتِ لَيَسْتَخْلِفَنَّهُمْ فِي الْأَرْضِ كَمَا اسْتَخْلَفَ الَّذِينَ مِنْ قَبْلِهِمْ وَلَيُمَكِّنَنَّ لَهُمْ دِينَهُمُ الَّذِي ارْتَضَى لَهُمْ وَلَيُبَدِّلَنَّهُمْ مِنْ بَعْدِ خَوْفِهِمْ أَمْنًا يَعْبُدُونَنِي لَا يُشْرِكُونَ بِي شَيْئًا﴾

(மனிதர்களே) உங்களில் விசுவாசங்கொண்டு, நற்கருமங்களையும் செய்கிறார்களே அத்தகையவர்களுக்கு - அவர்களுக்கு முன்னர் சென்றவர்களை அதிபதிகளாக்கிய பிரகாரமே இவர்களையும் நிச்சயமாகப் பூமிக்கு அதிபதிகளாக ஆக்கிவைப்பதாகவும், அவன் அவர்களுக்கு பொருந்திக் கொண்ட மார்க்கத்தில் அவர்களை நிச்சயமாக உறுதிப்படுத்தி வைப்பதாகவும் அவர்களுடைய பயத்திற்குப்

பிறகு அமைதியைக் கொண்டு நிச்சயமாக மாற்றிவிடுவதாகவும் அல்லாஹ் வாக்களித்திருக்கிறான். அவர்கள் எனக்கு யாதொன்றையும் இணையாக்காது என்னையே வணங்குவார்கள். (அல்குர்ஆன் 24:55)

மேலுள்ள வசனத்தில் லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கொள்கையின் மீதிருந்து அல்லாஹ் ஒருவனை மட்டுமே வணங்கி, அவனுக்கு எந்த ஒன்றையும் இணையாக்காமல் இருக்கின்ற நிலையில் மக்கள் இருந்தால் மட்டுமே அல்லாஹ் ஆட்சி, அதிகாரத்தை தான் நாடினால் வழங்குவான் என்பதை அறியலாம்.

4 - லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை ஏற்று அதனை தன்வாழ்வில் செயல்படுத்துபவருக்கு மனநிம்மதி கிடைக்கின்றது. அவரின் சிந்தனை ஓட்டமும் ஒருமுகப்படுத்தப்படுகிறது. ஏனெனில் அவர் அல்லாஹ் ஒருவனை மட்டுமே வணங்குகிறார். எனவே அவர் அந்த ஓர் இரட்சகனின் திருப்தியை பெறுவதற்காக அவன் அனுமதித்ததை செய்தும், அவன் விலக்கியதை விட்டு விலகியும் இருப்பார். பல தெய்வங்களை வணங்குபவரை எடுத்துக் கொண்டால், அந்த தெய்வங்களில் ஒவ்வொரு தெய்வத்தின் திருப்தியும் ஒவ்வொன்றாக இருக்கும். அனைத்து தெய்வங்களையும் திருப்திப்படச் செய்வது அதனை வணங்குபவரால் நிறைவேற்ற முடியாமல் போய்விடுகிறது.

﴿أَأَرْبَابٌ مُتَفَرِّقُونَ خَيْرٌ أَمِ اللهُ الْوَاحِدُ الْقَهَّارُ﴾

(யாதொரு சக்தியுமற்ற) பல்வேறு தெய்வங்கள் மேலா? அல்லது (யாவற்றையும்) அடக்கி ஆளுகின்ற ஒருவனான அல்லாஹ்வா? (அல்குர்ஆன் 12:39)

﴿ضَرَبَ اللهُ مَثَلًا رَجُلًا فِيهِ شُرَكَاءُ مُتَشَاكِسُونَ وَرَجُلًا سَلَمًا لِرَجُلٍ هَلْ يَسْتَوِيَانِ مَثَلًا﴾

கருத்து வேற்றுமையுள்ள (தீய குணங்களைக் கொண்ட) பல கூட்டுக்காரரர் களைக் கொண்ட ஒரு மனிதனையும் (எந்த கூட்டுக்காரர்களும் இல்லாது கலப்பற்றவாறு) ஒரே மனிதனுக்குச் சொந்தமான வேறு ஒரு மனிதனையும்

அல்லாஹ் உதாரணமாகக் கூறுகிறான். உதாரணத்தால் அவ்விருவரும் சமமாவார்களா? (சமமானவர்கள் அல்லர்). (அல்குர்ஆன் 39:29)

இமாம் இப்னுல் கய்யிம் (رحمه الله) அவர்கள் கூறுகிறார்கள், அல்லாஹ் இவ்வசனத்தில் பல தெய்வங்களை வணங்குபவரை, பல எஜமான்களை கொண்ட அடிமைக்கு உதாரணமாக கூறுகிறான். ஓர் அடிமைக்கு பல எஜமான்கள் இருக்கும் போது அவர்களின் கட்டளையை நிறைவேற்றி அவர்கள் அனைவரின் திருப்தியையும் பெறுவது சாத்தியமற்றதாகும். அதுபோலவே பல தெய்வங்களை வணங்குபவரின் நிலையும் உள்ளது.

அல்லாஹ் ஒருவனை மட்டுமே வணங்குபவரை, ஒருவரை மட்டுமே எஜமானாக கொண்ட ஓர் அடிமைக்கு உதாரணமாக கூறுகிறான். அந்த அடிமை தனது எஜமானின் நோக்கத்தை அறிந்திருப்பார், எஜமானின் விருப்பத்திற்கான வழியை தெரிந்து வைத்திருப்பார். இதனால் எவ்வித குழப்பம், பிரச்சனைகள் இல்லாமல் தனது எஜமானருக்கு கட்டுப்பட்டு நடந்து அவரின் அன்பையும், அரவணைப்பபையும் பெற்று கொள்வார். இந்த இரண்டு அடிமைகளும் எவ்வாறு ஒன்றாக முடியாதோ அவ்வாறே அல்லாஹ்வை மட்டுமே வணங்குபவரும் பல தெய்வங்களை வணங்குபவரும் ஒன்றாக முடியாது.

5 - லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை ஏற்பவருக்கு இம்மையிலும், மறுமையிலும் உயர்வு ஏற்படுகிறது.

﴿مَنْ عَمِلَ صَالِحًا مِنْ ذَكَرٍ أَوْ أُنْثَى وَهُوَ مُؤْمِنٌ فَلَنُحْيِيَنَّهُ حَيَاةً طَيِّبَةً وَلَنَجْزِيَنَّهُمْ أَجْرَهُمْ بِأَحْسَنِ مَا كَانُوا يَعْمَلُونَ﴾

ஆண் அல்லது பெண் - அவர் விசுவாசம் கொண்டவராக இருக்க, யார் நற்செயலைச் செய்தாரோ நிச்சயமாக நாம் அவரை நல்ல வாழ்க்கையாக வாழச் செய்வோம். இன்னும் நிச்சயமாக அவர்களுக்கு அவர்களது கூலியை அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றில் மிக அழகானதைக் கொண்டு நாம் கொடுப்போம். (அல்குர்ஆன் 16:97)

இவ்வசனத்தில் விசுவாசங்கொண்டவராக இருந்து நற்செயலை செய்பவர் என்பது லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை ஏற்று, இஸ்லாமிய கொள்கைகளில் சரியான நம்பிக்கையில் இருப்பவரை குறிக்கும்.

﴿حُنَفَاءَ لِلَّهِ غَيْرَ مُشْرِكِينَ بِهِ وَمَنْ يُشْرِكْ بِاللَّهِ فَكَأَنَّمَا خَرَّ مِنَ السَّمَاءِ فَتَخْطَفُهُ الطَّيْرُ أَوْ تَهْوِي بِهِ الرِّيحُ فِي مَكَانٍ سَحِيقٍ﴾

அல்லாஹ்வுக்காக (அசத்தியத்தை விட்டு சத்தியத்தின்பால்) சாய்ந்தவர் களாக அவனுக்கு எதனையும் இணைவைக்காதவர்களாக வழிபட்டு விடுங்கள். இன்னும் எவன் அல்லாஹ்வுக்கு இணைவைக்கின்றானோ அப்பொழுது அவன் வானத்திலிருந்து (முகங்குப்புற) விழுந்து பறவை கள் அவனை இராய்ஞ்சிக் கொண்டு சென்றதைப் போன்றோ அல்லது (பெருங்) காற்று அவனை வெகு தூரத்தில் உள்ள இடத்திற்கு அடித்துக் கொண்டு சென்றதைப் போன்றோ இருக்கிறான். (அல்குர்ஆன் 22:31)

இந்த வசனத்தில் அல்லாஹ் தவ்ஹீத் கொள்கைக்கு உயர்வும், இணை வைத்தலுக்கு வீழ்ச்சியும் இழிவும் ஏற்படும் என கூறுகிறான்.

இமாம் இப்னுல் கய்யிம் (رحمه الله) அவர்கள் கூறுகிறார்கள், தவ்ஹீத் மற்றும் இறைநம்பிக்கையின் அந்தஸ்தை விவரிக்கும் போது வானத்தோடு ஒப்பிடப்படுகிறது. ஏனெனில் அதனை நோக்கியே மேலே செல்லவும், அதிலிருந்தே பூமி நோக்கியும் வரவேண்டியதாக இருக்கிறது. ஆகவே இது உயர்வாகவும், மிகப்பெரிய அந்தஸ்தாகவும் இருக்கிறது.

இணைவைத்தலை பற்றி விவரிக்கும் போது வானத்திலிருந்து கீழ்நோக்கி விழுவதுடன் ஒப்பிடப்படுகிறது. அவ்வாறு விழுபவருக்கு அது கடும் நெருக்கடியாகவும், அபாயத்தை ஏற்படுத்த கூடியதாகவும் இருக்கும். அவ்வாறு விழும்போது பறவைகள் அவனின் உடல் பாகங்களை பிடித்து கிழித்துவிடவோ அல்லது பலமான காற்று அவனை தூரமான இடத்திற்கு கொன்று சென்று வீசிவிடும். ஆக இணைவைப்பவருக்கு இழிவும், வேதனையும் இருக்கிறது.

6 - இஸ்லாமிய அரசாங்கத்தின் கீழ் வாழும் போது லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவே ஒருவரின் உயிர், உடைமைக்கு பாதுகாப்பபை ஏற்படுத்தி தருகிறது.

عَنْ جَابِرٍ قَالَ قَالَ رَسُولُ اللهِ صلى الله عليه وسلم أُمِرْتُ أَنْ أُقَاتِلَ النَّاسَ حَتَّى يَقُولُوا لاَ إِلَهَ إِلاَّ اللهُ فَإِذَا قَالُوا لاَ إِلَهَ إِلاَّ اللهُ عَصَمُوا مِنِّى دِمَاءَهُمْ وَأَمْوَالَهُمْ إِلاَّ بِحَقِّهَا وَحِسَابُهُمْ عَلَى اللهِ

நபி ﷺ அவர்கள் கூறினார்கள், மக்கள் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறும் வரை அவர்களுடன் போரிட வேண்டும் என நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். அவர்கள் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று கூறிவிட்டால் தங்களின் உயிர், உடைமைகளை என்னிடமிருந்து பாதுகாத்து கொள்வார்கள். அதனுடைய உரிமையில் வரம்பு மீறினாலே தவிர! அவர்களின் கேள்வி கணக்கு அல்லாஹ்விடமே உள்ளது என நபி ﷺ அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பாளர்: ஜாபிர் பின் அப்துல்லாஹ் رضي الله عنه நூல்: முஸ்லிம்)

அதனுடைய உரிமை என்பது லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமாவை கூறி, அல்லாஹ்விற்கு இணைவைக்காமல் இருந்து இஸ்லாத்தின் கடமைகளை நிலைநாட்டுவதாகும். இந்த நிலையில் அவரின் உயிருக்கும், உடைமைக்கும் பாதுகாப்பு அளிக்கப்படும். அதனுடைய உரிமைக்கு மாற்றமாக இணைவைக்கவோ அல்லது இஸ்லாத்தின் கடமைகளை மறுக்கவோ செய்தால் அவருடைய உயிருக்கும், உடைமைக்கும் பாதுகாப்பற்ற நிலை ஏற்படும்.

இவ்வாறாக லாஇலாஹா இல்லல்லாஹ் என்ற கலிமா அதனை ஏற்பவர்களின் வணக்கங்களிலும், நடைமுறைகளிலும், ஒழுக்கங்களிலும், பழக்கவழக்கங்களிலும் மகத்தான மாற்றங்களை ஏற்படுத்துகிறது.

---------------

